# அண்ணா அறுபது.

இஃது

திராவிட ஆட்சிமுறை 333, திராவிடத்துப் பரணி,
தமிழன் உலா, புலவர் விடு தூது, தமிழின்
உயிர் நாடி - ஆகிய நூல்களின் ஆசிரியரும்,
மாநிலத் தமிழ்க்கவிஞர் பெருமன்ற
பொதுச் செயலாளரும்,
இராசிபுரம் நகர தி. மு. க.
அவைத் தலைவருமாகிய

## கவிஞர். கி. அரங்கசாமி

அவர்களால் ஆக்கப்பெற்றது.



1968 செப்டம்பர் 15



வெளியிடுவோர்:

**திருக்குறள் பதிப்பகம்**

இராசிபுரம் :: (சேலம் மாவட்டம்.)
தமிழ் நாடு.

முதற்பதிப்பு — புத்தகம் 1000
1968 செப்டம்பர் — 15




<u>வெளிவருபவை:</u>

அன்புக் கலம்பகம்
மகளிர் ஆற்றுப்படை
மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்
அறநெறித் திருப்புகழ்
திருத்தமிழ் சிலேடை வெண்பா
கவலர் அறநெறி




அச்சிட்டோர்:
ஸ்ரீ தனலக்ஷ்மி பவர் பிரஸ், இராசிபுரம்.

# முன்னுரை.

நாடும் நாட்டு மக்களும் செழிக்க வேண்டுமாயின் அந்நாட்டு தலைவரின் ஆக்கப்பணி செழிக்க வேண்டும். தலைவர் பணியைச் சிறப்பிக்கும் இலக்கியங்கள் வளர வேண்டும். இலக்கியங்களை ஆக்கித்தரும் சிறந்த அறக் கவிஞர்கள் மக்களை வாழ்விக்கும் கருத்துக்களைப் பாட வேண்டும்.

தொன்மைக் காலத்தில் பாவலர்கள் மனையற மாண்பைப் பாடி மக்களையும், ஆட்சியையும் வளர்த்தார்கள். அன்று, நாடு செழித்தது; வளம் கொழித்தது.

இடைக்காலத்தில் காமத்தைப் பாடினார்கள். காமம் வளர்ந்தது, கூடவே மக்கள் பெருக்கமும் சச்சரவும் பெருகியது. பின் கடவுளைப் பாடினார்கள். பலவகை கடவுள்களும் கோவில் திருவிழா இப்படி வீண் செலவு பெருத்தது. தமிழக அறிவும் பொருளும் மக்கள் வளத்தைப் பெருக்கப் பயன்படவில்லை. ஒரு இறையை வழிபட்ட நிலை ஒழிந்து பல்குழுவும், பாழ்செய்யும் உட்பகையும் வளர்ந்தது.

தமிழகத்திற்கு தனிப்பெரும் தலைவரே இல்லாமல் ஆற்றல் எல்லாம் சிதருண்டு கிடந்தது. தலைவரை சிறப்பிப்பது நரதுதி என்று இழித்துரைக்கப்பட்டது. மக்களை மக்கள் வெறுத்து பகைமையை வளர்த்துக் கொண்டனர். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் சென்றும், சொந்த வீடு இல்லாதவர்களையும் குடிசைகளில் வாழுவோரையும் காணுகின்றோமென்றால் அதற்குக்காரணம் என்ன? மனையற மாண்பை மறைத்து மனிதத்தன்மைக்கு மதிப்பளிக்காது கடவுள் நிலைக்கே முழுநேரமும் பணிபுரிந்து கவிஞர்கள் இலக்கியம் இயற்றியதாகும்.

இந்நிலை மாறி மக்கள் வளம் பெருகவேண்டுமானால் இலக்கியநலம் சீர்பெறவேண்டும்.

அதற்காகவே நான் 1929-ல் இருந்து பெரியாரின் சுயமரியாதை இயக்கம் வளர பணிபுரிந்தேன். பல மாநாடுகளுக்குத் தொண்டர்படைத் தலைவனாகப் பணியாற்றினேன். திருக்குறள் கருத்தை நாட்டில் பரப்ப 1947-ல் **"திருக்குறள் ஆட்சி"** என்ற திங்கள் இதழை நடத்தினேன். தமிழின் உயிர்நாடி, தமிழன் உலா, புலவர் விடு தூது போன்ற புதுமை நூல்களை வெளியிட்டேன்.

பெரியார் அவர்கள் அரசியலைத்தாங்கி நடத்த முனையாததால், அண்ணா அவர்கள் தலைமைதாங்கி நடத்தும் வாய்ப்பு ஏற்பட்டது. நானும் அண்ணாவொடு இணைந்தேன். இந்நாட்டில் அண்ணா தலைமை சிறக்க வேண்டும் என்பதற்காக 1957-ல் திராவிட ஆட்சி முறை 333 என்ற இலக்கியத்தை வெளியிட்டேன். அண்ணா அணிந்துரை அளித்து சிறப்பித்தார். மக்கள் இலக்கியம் வளரத்தொடங்கியது. அண்ணாவின் ஆட்சி அமைய பரணிபாட வேண்டும் என்ற கருத்தில் 1961-ல் திராவிடத்துப் பரணியை வெளியிட்டேன். பரணி வாக்கு பலித்தது, 1967–ல் "அண்ணா ஆட்சி" தமிழக ஆட்சியாக மலர்ந்துள்ளது.

இந்நிலையில் அறிஞர் அண்ணாவின் அறுபதாண்டு நிறைவுவிழா நடைபெறுகிறது. அண்ணா அவர்களின் அருஞ்செயல்களை விளக்கியும், அண்ணாவின் விழைவு எல்லாம் வெற்றி பெறவும் — **அண்ணா அறுபது** என்ற இந்நாலை அண்ணா அவர்களுக்கு பிறந்த நாள் பரிசாக்கி, அண்ணா நீடு வாழ்க என வாழ்த்தி வணங்குகிறேன். வாழ்க அண்ணா!

இராசிபுரம்.
15—9—1968.

அன்பன்,
கி. அரங்கசாமி

# அணிந்துரைகள்.

## பேராசிரியர் திரு. க. அன்பழகன், M.A.,M.P. அவர்கள்
சென்னை—7.

தமிழகத்தின் மாண்புகள் யாவும் ஒளிரக் கதிர் மணியாய் விளங்கும் தன்னிகரற்ற தலைவர், ஈடு இணையற்ற முதல்வர், பல்கலைப் பேரறிஞர் அண்ணா அவர்களின் அறுபதாம் ஆண்டு விழாவை மன்னர்கட்கு நிகழும் மங்கல விழாவென போற்றி, பூம்புகார் கண்ட இந்திர விழாவென மக்கள் திரண்டு நாடெங்கும் கொண்டாடும் நாட்களில் தமிழகத்துக் கவிஞர்களும், புலவர்களும் பாமாலை சூட்டிப் பேருவகை கொள்ளத் தலைப்படுவது இயல்பு.

புலவர் திலகமாய்த் திகழும் முதியவர், கவிஞர் அரங்கசாமி அவர்கள்.

பழந்தமிழ்ப் பாமுறைகளைத் தழுவி, முற்போக்குக் கொள்கைகளைத் தாங்கி, முன்னேற்றக் கழகத்திற்குத் துணையாகி, பலப் பல கவிதை ஏடுகளை இயற்றி புலவர்கள் பாராட்டும் நிலைபெற்று, அண்ணா அறுபது என்னும் குறுங்காவியங்கண்டு,

அண்ணா பண்பு அறுபது
அண்ணா அருஞ்செயல் அறுபது
அண்ணா ஆட்சிப்பணி அறுபது
அண்ணா விழைவு அறுபது

என்னும் நறுமணப் பாமாலை தொடுத்து அணிவிப்பது பாராட்டத் தகுவதாகும்.

கவிதைகளின் தனிநலத்தை நான் எடுத்துக்காட்ட வல்லேன் அல்லன். கவிதைகளைப் படித்து மகிழ்பவன் என்னும் முறையில் யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் ஆர்வத்துடன் இந்நூலை தமிழகத்து மக்கள் சார்பில் வரவேற்கின்றேன்.

உயர்ந்த குறிக்கோளும், சிறந்த புலமையும், ஆழ்ந்த கவிதை உணர்வும் கொண்டு விளங்கும் கவிஞர் அரங்கசாமியின் கவிதைத் தொண்டு வளர்க, குறிக்கோள் வெல்க. வாழ்க பல்லாண்டு என்று வாழ்த்தி அண்ணா அறுபது பாமாலை சூடிய தலைவர் அண்ணா வாழ்க, என்று போற்றி இந்நூலைப் பாராட்டி வரவேற்கிறேன்.

**க. அன்பழகன்**

மகாவித்துவான்

## திரு. மே. வி. வேணுகோபால் அவர்கள்

சென்னை-7

### வெண்பா

அண்ணா அறுபதெனும் அன்புமகு டஞ்சூட்டிப்
பண்ணார் கவிதை பலதந்தான் — நண்பார்
கவியரங்க சாமியெனும் கண்ணியன்மற் றிந்நூல்
புவியிற் சிறக்கப் புகழ்ந்து.

புகழ்சா லண்ணாவின் பொருள்பொதிந்த இந்நூல்
திகழும் உலகிற் சிறந்து மிகவினிய
நல்லோர்கள் பண்பால் நலம்விளைதல் கண்டறிந்த
பல்லோரும் கற்பர் பரிந்து

ஆடவர்க ளெல்லாம் அருட்குணத்த ராய்வாழின்
பீடுபெறும் நாடு, பிறங்குலகும் — ஈடின்றி
நன்மையெலாம் பெற்று நனியுயரும், ஆதலினால்
இந்நூல் உதவும் இனிது.

**மே. வி. வே.**

*தஞ்சை கரந்தைப் புலவர் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர்*

## திரு. ச. பாலசுந்தரம் அவர்கள்

அண்ணா அறுபதெனும் பண்ணார்
அருமை சான்ற நூலொன்றைத்
தண்ணார் தமிழில் தகைசான்ற
சால்பால் அரங்க சாமியெனும்
கண்ணார் கவிஞர் களிப்பேறக்
கற்கண் டாக அளித்துள்ளார்
விண்ணார் சுடரின் நாடெங்கும்
விளங்கும் வாழும் அவர்தொண்டே.

அன்பன்,

**ச. பாலசுந்தரம்**

சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்

## திரு. மா. கி. தசரதன், M. A., அவர்கள்

கவிஞர் அரங்கசாமி அவர்களின் கவிதை நூல்களைப் பல முறை சுவைத்து மகிழ்ந்தவன் நான்.

பண்டைய முறைகளில் புதிய படைப்புக்களை ஆக்கித் தரும் கற்பனை வளம் நிறைந்த நல்லாசிரியர் அவர்.

தமிழின்பாலும், தமிழர் தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்களின் பாலும், நீங்காத பற்றுடையவர். தம் திறங் கொண்டு தான் பெற்ற இன்பத்தைப் பெறுக பிறரும் என்ற பெருநோக்கோடு அவர்யாத்துள்ள புதிய இலக்கியங் கள் அன்பர்களின் உள்ளத்தை குளிர்விக்கும் இயல்புடையன, கற்போர்க்குப் பயன் தருவன.

அத்தகைப் பெருந்தகையார் புதிய ஆட்சிப்பொலிவைத் தமிழகத்திற்குத் தந்துள்ள தமிழர் தலைவர் பேரறிஞர் அண்ணாபற்றி அறுபது பாடியுள்ளார். அண்ணா புகழ் அவனி எங்கும் பரவியது. அதனை அறுபதில் கூறும் கவிஞரின் முயற்சியைப் பாராட்டி மகிழுகிறேன்.

வாழ்க அண்ணா!

அன்பன்,

**மா. கி. தசரதன்**

திருவையாறு அரசர் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்

## திரு. புலவர். வி. அ. அரங்கசாமி அவர்கள்

திரு. கவிஞர் கி. அரங்கசாமி அவர்கள் இயற்றிய அண்ணா அறுபது என்ற நூல், இனிமையும் எளிமையும் அமைந்த சொல்லாட்சியோடு அண்ணாவின் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் தொண்டுகளையும் அமைத்துப் பாடியிருப்பது பாராட்டுதலுக்குரியதாகும்.

வழித்தோன்றல்களுக்கு இஃதோர் வழியாக நிற்கும் எனக்கருதுகின்றேன்.

**வி. அ. அரங்கசாமி**

மாநிலத் தமிழாசிரியர் கழகத்தின் பொதுச்செயலாளர்,
சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.
மாணவர் மன்றச்செயலாளருமாகிய பேராசிரியர்

## திரு. அன்புகணபதி அவர்கள்

தமிழகம் பெற்றெடுத்த தவமகனும் தனிப்பெரும் தலைவருமான பேரறிஞர் அண்ணா அவர்கள் 60 ஆண்டுவிழா நினைவாக வெளிவரும் **"அண்ணா அறுபது"** எளிமையும் இனிமையும் வாய்ந்த கவிமலர்களான நறுமண மாலையாகும்.

இம்மாலையைத் தொடுத்த கவிஞர் இராசிபுரம் திரு. கி. அரங்கசாமி அவர்கள் பழைய தமிழ் மரபில் வந்த பெருங்கவிஞராவார்.

இக்கவிஞரால் வாழ்த்தப் பெறும் அண்ணா அவர்களும் அவர்தம் சீரிய ஆட்சியின் கீழ் அமைந்துள்ள இன்றைய தமிழகமும் எதிர்காலத்தில் பேரும் புகழும் பெற்றுச்சிறந்திட இந்நூல் பெரிதும் பயன் பெறும் என உளமார வாழ்த்துகிறேன் கவிஞர் வாழ்க, அவர்தம் தொண்டுகள் வாழ்க.

**அன்புகணபதி**



**நாடகத்தலைவர் திரு. தி. க. சண்முகம்,** எம். எல். சி.,
**அவர்கள், சென்னை—6.**

புலவர் அரங்கசாமி அவர்கள் இயற்றிய அண்ணா அறுபது பாடல்களைப் படித்தேன், சுவைத்தேன், தேனாக இனித்தது. நயமான பாடல்கள். இலக்கியமாகப் போற்றத் தக்க நூல்.

புலவர் அரங்கசாமி அவர்களை நான் பல ஆண்டு களாக அறிவேன். கற்பனை வளம் மிகுந்த சிறந்த கவிஞர். நாட்டுக்குப் பயன்தரும் நல்ல பல நூல்களை இவர் படைத்துள்ளார்.

திருக்குறள் ஆட்சி, இவரது திங்கள் இதழ். அது மீண்டும் வெளிவந்து உலவ வேண்டும் என்பது என் அவா. புலவரின் எண்ணத்திற்கு மதிப்பளிக்கும் ஆட்சி இன்று அமைந்துள்ளது. அவ்வாட்சி திருக்குறள் ஆட்சிக்குத் துணைபுரியும் என நினைக்கின்றேன்.

செந்நாப்புலவர் அரங்கசாமி வாழ்க!

அன்பன்,

**தி. க. சண்முகம்**

**புலவர் தமிழன்பன், ஈரோடு.**

கட்டவிழும் நூறுமலர்த் தேனினிப்பைக்
கசப்பதென்று காது பெற்றோர்
மட்டற்ற மகிழ்வதனால் பாராட்டப்
பேசிடுவார் மணிச் செயல்கள்
தட்டாமல் நாடோறும் நிறைவேற்றித்
தந்திடுவார் தமிழர் நெஞ்சைத்
தொட்டுலவி வருந்தென்றல் ஆகிடுவார்
அவர்பெருமை சொல்லும் இந்நூல்.

பதர்அமைச்சர் கூட்டத்தை ஊதிவிட்டுப்
பதவியிலே இந்நாள் மக்கள்
முதல்வரெனத் தமிழறிந்த அண்ணுவை
மூதறிஞர் தனையே கொண்டார்
இதனுல்தான் மனங்குளிர்ந்த **இராசையரங்
கசாமியவர்** எழுச்சி பெற்றுப்
பதம்படுபல் பாடல்நூல் படைத்துள்ளார்
இதைக் கொஞ்சம் படித்துப்பார்ப்பீர்.

**தமிழன்பன்.**

## நூற்பயன்.

அண்ணுஅறுபது அருஞ்செய லுடையது
அணிமுறை யொடுதமிழ் பணிசெய முனைவது
அண்ணுஅறுபது தமிழக முறையினை
அகமதில் நிலைபெறு வழிகளை யுடையது
அண்ணுஅறுபது அரசிய லுடையது
அதிவிரை வினில் தொழிலமைதித ருவதிது
அண்ணுஅறுபதை அகமகிழ் வொடுபடி
அதுமனை வளமதை தெளிவொடு தருகுமே.

நிறைவொடு தமிழறி வதுவிழை தருமிது
நினைவொடு செயுமுறை பழகிட வழியிது
நிறைவொடு தமிழக வளமது பெருகிட
நிலைபெறு தொழில்வள மமைதர வழியிது
நிறைவொடு கலைபொறி பெருகிடு முறையிது
நிலமதில் புகழொடு வளர்தர வழியிது
நிறைவய துடையறி வுளதமி ழண்ணு
நீளுரை யறுபது தமிழற மாமே.



இந்நூலாசிரியர் கவிஞர். கி. அரங்கசாமி அவர்கள்.

# அண்ணு அறுபது.

## இறை வணக்கம்

அருள்வழங்கு மறிஞரண்ணு அறுபாணுண்டின்
அன்புவிழா தமிழுணர்வே நிறைவுபெற்றுத்
திருமலியும் தமிழரசின் தலைமைநீடு
திகழ்பல் லாண்,டுயர்ந்துபல சிறப்பைச்செய்தே
ஒருமையொடே பெருநெறியி ஞெழுக்கங்காத்திவ்
வுலகமெலா முளங்குளிரு முயர்வைச்சேர்த்தே
திருவினெடு நிறைநலனுய் வாழ்கவென்றே
திருவருளாம் பேரிறையை வணக்கம்செய்வாம்.

# அண்ணு பண்பு அறுபது.

## தரவிணைக் கொச்சகக் கலிப்பா.

அடுக்கடுக்காய்த் திருக்குறளை விளையாடும் குறட்கோவில்
அறிவுநிறை குழுவினரால் ஆய்ந்தெடுத்த அறப்பேழை
ஆதிக்கத் திமிர்நோயை அடக்கவல்ல சொல்மருந்து
இல்லையென்ற சொல்லமையாதீயும் பேரூற்று
5.உள்ளுணர்வால் காதலிக்கும் பைந்தமிழின் சொல்மடந்தை

எடையின்றி விலைமதிக்கும் யீடற்ற ஆணிமுத்து
எதிர்ப்பைக் கவிழ்த்துவிடும் எதிரற்ற மலையருவி
எண்ணற்ற கருத்தடங்கு மெழில்மிக்க பொன்னேடாம்
எளிதினிலே அடைந்திடுமோர் பழுதற்ற நல்வாழ்வு
10.ஏட்டறிவை நாட்டினுக்கே எடுத்துரைக்கும் மெய்ஞ்ஞானி

குளிர்ந்துள்ள பண்புவளம் கூட்டுவிக்கும் கார்மேகம்
தேர்ந்தே தெளிதலுடைத் திண்மைமிகு செப்பேடு
நோக்கத்தால் பிறருளத்தை யீர்க்கவல்ல கலைஞானி
பகைத்தோர் கண்டுகொளாப் படைப்புள்ளவெண்பூட்டு
பின்தங்கி முன்னேறும் பேராண்மை வெள்ளாடு

மதிப்பறியாப் பொருளடங்கும் மலைநாக மாணிக்கம்
விளக்குதலிற் களங்கமிலா வீரமொளிர் நற்கதிரோன்
வீட்டறத்தைக் காத்தமைக்கும் வீரத்தமிழ்வேந்து
வெற்றியொடே தான்திரும்பும் வீரத்தமிழ்க்கவிஞன்
வீணுக் கொருகணமும் விட்டுவிடா மணிக்கூடு

## அஃதே போல்

அடங்கிடுமோ ரெண்ணமிலா ஆண்மைச்சிங்கம்
அடிமைகொளா விடுதலையி னாட்சிபீடம்
அடுக்குடனே சொல்முழக்கும் வயிரயாழே
அடுத்தடித்தால் துடித்தெடுப்போ டுயரும்பந்து
அடைந்திடில்பே ருளங்குளிரும் அமைதிநீழல்

அருந்தமிழின் கலையுணர்த்தும் அறிவுமேதை
அளப்பரிதாய்க் கொட்டுகிற வளமைமேகம்
அள்ளஅள்ளக் குறைவுபடா அமுதஆழி
உண்ணவுண்ணத் தெவிட்டாத வண்ணப்பாகாம்
உலகறியப் பேர்தாங்கும் வயிரக்குன்றம்

உலகியங்கக் கலைபரப்பும் நிறைவுத்திங்கள்
ஊர்மகிழ காடுயரத் தேங்கும் ஏரி
எண்ணத்தா லளந்தறியாப் பேராகாயம்
கலங்கலிலாத் தெளிவுடைய பளிங்குமேடை
காணுகின்ற தோற்றமதில் காட்டுயானை

காணுதற்குச் சலிப்பற்ற காட்சிப்பூங்கா
குழப்பத்தைக் கண்டஞ்சா வீரவேந்து
கேள்விதனைத் தேடுகின்ற வைரநெஞ்சு
தீமைகளைத் தீய்ப்பதிலே ஊழியத்தீயாம்
தேடிவந்துப் பாடியெழும் சோலைக்காற்று

தொட்டிலோ பற்றிடும்சீர் காதற்கூட்டு
தொல்லையிலா நல்விளைவுக் கழகப்பண்ணை
நடையறியா ஓட்டமுடை வீரவேங்கை
நிழலறியாப் பரந்தவெளி ஞானதீபம்
நீண்டுவளர்ந் திணைகாணாத் தென்னஞ்சோலை

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புக்கேணி
பலகிளையைத் தாங்குமுயர் வைரத்தேக்கு
பழியறியாக் களங்கமற்ற தங்கக்குன்று
பார்த்திடற்கே எழிலமைந்த வண்ணத்தோகை
போரதனைக் கண்டெழும்பும் வேட்டைச்செந்நாய்

யாவர்களும் நண்புகொளும் பண்புச்சோலை
வரண்டிடினும் வளம்பெருக்கும் வாய்ப்புக்குன்று
வாட்டமதை நீக்கிமகிழ் வாக்கும் தேமா
விலைமதிக்கத் துணையறியாத் தவத்தின்மேதை

அழைத்திடும் அருள்வாக்கு
கிடைத்திடும் கருநெல்லி
சிரித்திடும் பொற்பாவை
நடித்திடும் பைங்குழந்தை
பறந்துவரும் நூல்நிலையம்
வடித்தெடுத்தத் தெங்கிளநீர்

ஆதலால்

அறிஞர் அண்ணா பண்பாட்டை
ஆய்ந்து தெளிந்தால் அறவழியாமே.

# அண்ணு அருஞ்செயல் அறுபது.

## அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

### 1 குழந்தை குணச்சிறப்பு.

பழந்தமிழின் தாய்ப்பண்பு பூத்துக்காய்த்து
பலகலைகள் கனிந்தினிக்கும் தமிழ்த்தாய்தந்த
குழந்தையண்ணு வெனப்பிறந்து புதுமைதேர்ந்து
கூரறிவின் தம்பிகளோ டுறவுகொண்டு
மழலைமொழி யிளந்தமிழைப் பொழிந்துமக்கள்
மதிநிறைந்த வுளத்தினுளே நிலையாய்நிற்கப்
பழமொழியைக் குழந்தைமொழிப் படைப்பால்நல்கும்
பண்புடைய விளையாட்டு அண்ணுவாழ்க.

### 2 இளமை உளத்தின் தன்மை.

இளமையுளம் பற்றியதென் னகத்தின்பற்று
இன்றளவும் வளமதொடு நிறைவேபெற்று
வளமனையின் சிறப்புணர்வால் வளர்ந்துநின்று
வாய்மையொடு மெய்ம்மையுண்மை வளஞ்செழித்து
பிளவுகொளும் தீயகுணங் கொண்டோர்தம்மின்
பிதற்றுதலுக் கஞ்சாத பேற்றைப்பெற்று
இளிவகலும் பேராண்மை நண்புச்சீலத்
தெழிலோடு வளர்ந்துரிய அண்ணுவானர்.

### 3 வாலிப உளத்தின் தன்மை.

தமிழ்மணக்கும் கல்லூரிக் கலையைகற்றுத்
தனியழகா மாங்கிலத்தில் முதன்மையுற்றே
அமிழ்தெனவே சொல்முழக்கு மாற்றலோடு
அவையறிந்து கருத்தமைக்கும் திறனைப்பெற்றே
தமக்கெனவே தனிநடையைத் தேர்ந்துக்கொண்டு
தவறேற்கா நடுநிலையின் வழியைக்கண்டே
அமைதியொடு அரசியலின் ஆய்வுநூலின்
அகிலமுறை வரலாற்றில் தேர்ந்தாரண்ணு.

## 4. பேருளத்தின் தன்மை

மனையறத்தைப் பேணுவதில் மகிழ்ச்சிகண்டார்
மாற்ருரைத் தாங்குவதில் புகழ்ச்சிபெற்ருர்
தனியறத்தால் சேயர்குலம் செழிக்கச்செய்தார்
தகுதிமிக்க தாயைமிகத் தாங்கிநின்ருர்
இனமுறைமைக் கிடம்தந்தே எழிலேக்காத்தார்
எல்லோர்க்கும் நல்லவரா யிருக்கக்கற்ருர்
கனமுடையோர் மகிழ்தரவே வளமேபெற்று
கருணேமலி வடிவுடனே தெளிந்தாரண்ணு,

## 5 ஆய்வுத் திறனுற்றல்

நுண்ணுணர்வால் பலதுறையை நுணுகியாய்ந்தே
நூற்பலவால் நுழைபுலத்தைச் செம்மையாக்கி
எண்ணத்தின் திண்மையினு லெதிர்காலத்தின்
எழிலதனேச் சிந்தித்தே யிடரகற்றும்
வண்ணமிகு தொழிற்கலேயை வளர்த்துக்காக்கும்
வளமமைத்துத் தமிழகத்தின் மரபைக்கோத்து
கண்ணுறவால் கணித்தறிந்துக் குறிப்பைத்தேக்கிக்
கருத்தமைக்கும் பேறுபெற்ற தண்ணுதானே.

## 6. அகப்பொருள் புறப்பொருள் விளக்கம்.

தமிழகத்தே சிறந்திருந்தத் தமிழராட்சி
தனேமறைத்தே பற்பலவாம் வஞ்சம்செய்தே
தமிழகத்தின் புறப்பொருளே மறைத்துப்போரின்
சச்சரவைக் கலந்தழகாம் நூலுண்டாக்கி
அமிழ்தினுமே சிறந்தநலத் தமிழறத்தின்
அகத்துறையுள் காமகதை கனேநுழைத்தே
தமிழறத்தை மறைத்திருந்த நுண்மைகண்டு
தன்மானத் தமிழ்வளர்த்த தண்ணுதானே.

## 7. தொண்டின் தனிப்பண்பு

உள்ளன்பால் நண்பர்களைப் பேணிப்பேணி
உடனிருந்துக் காப்பதிலே வீரரண்ணு
தெள்ளியராம் தொண்டர்களைத் தேற்றித்தேற்றி
திருத்துவதில் நல்லுணர்ச்சி தீரரண்ணு
வள்ளலுடைத் தனித்தமிழுக் குயிரையீந்த
வன்றொண்டர்க் கருள்சுரக்கு மன்பரண்ணு
கொள்ளுதலைக் கொள்ளென்று கொடுத்துக்காத்துக்
கொடைகுணத்தைச் சிறப்பித்த தண்ணுதானே.

## 8 தமிழர்களைத் தன்வயப்படுத்தியது.

வடக்காட்சி சூழ்ச்சியினர் வறுமைதேக்க
வாய்ப்புடைய வாணிபத்தை முடக்குவார்கள்
அடத்தொடமை காங்கிரசி னுட்சிப்போக்கை
அணுவளவும் திருத்திவிட முடியாதென்றே
திடத்துடனே தமிழர்தமைச் சேர்த்தொன்ருக்கித்
தீரமுடன் தமிழாட்சி நாட்டுதற்குப்
படக்காட்சி கலைக்காட்சி மேடைக்காட்சி
பலதுறையில் தமிழறத்தை வளர்த்தாரண்ணு.

## 9 நாட்டுப் பற்று

பற்றதனைப் பற்றுவதில் அண்ணுபற்று
பழந்தமிழின் சிறந்தபற்று நாட்டின்பற்று
கற்றதனில் கண்டுணரும் கல்விப்பற்று
காணுகின்ற மக்கள்தமின் நண்புப்பற்று
உற்றவரின் கருத்தறியும் நுண்மைப்பற்று
உறுதுணையின் காவலுடை நேர்மைப்பற்று
நற்றிறத்தின் பற்றினெடு நடத்தைப்பற்று
நாநிலத்தி லண்ணுவின் தூயபற்றே.

## 10. தூக்கந்தனிலும் விழிப்பு.

தூங்கிடும்போ தறிஞர்தமின் தூக்கந்தன்னுள்
தூயநிலை விழிப்பொன்று முந்திநிற்கும்
தூங்கிடுக தூங்கிடற்க என்றவாக்கின்
திருக்குறளை உறங்குவதால் தூய்மைகாப்பர்
தூங்காமல் தூங்குகிற தூக்கமொன்று
துறவோரின் வாழ்க்கைதனில் நிகழக்காண்பர்
பாங்குயரும் பேரண்ணா தூக்கம்சான்றோர்
பண்டறிந்த ஞானநிலைத் துரியமாமே.

## 11 ஓய்வற்ற பொதுப்பணி.

திடுக்கெனவே எழுந்திடுவார் தெளிந்துநிற்பார்
திருத்தமொடே அடுக்கடுக்கா யெண்ணங்காண்பார்
படுத்துருண்டே அடுத்தெழுந்தே நடந்துக்கொண்டே
பண்புயரும் வரலாற்றைப் படித்துக்கொள்வார்
திடத்தமையும் கருத்ததனைக் குறித்துவைப்பார்
தினத்திதழுக் கறவுரையைத் தேர்ந்துசேர்ப்பார்
உடுத்துடுத்து மகிழுதற்கே ஊக்கங்கொள்ளார்
ஒருகணத்தை வீணில்விடா ருரிமையண்ணா.

## 12 அடக்க முடைமை.

அடக்கமதே ஆயிரம்பொன் னென்றுசொல்வார்
ஐந்தடக்க லாமையிடம் காணென்பார்கள்
திடத்தறிவை அடக்கிவைக்க முடியாதென்பார்
திறமையுள்ளோர் அடங்கியிரா ரென்பர்மேலோர்
அடத்துடைய மனக்குரங்கை அடக்கிவைக்க
அருந்தவத்தைக் கற்றோர்கள் முனிவரானார்
இடத்தமைவில் அடக்கமுடைப் பண்புதன்னை
எழிலண்ணா உடலமைப்பே இயல்பாய்க்காட்டும்.

## 13. நம்பிக்கையின் சிறப்பு

நம்பிக்கை வைப்பதிலே தன்னைநம்பு
நாணயத்தை நம்புபொருள் தன்னைநம்பு
தம்பிகளை நம்பிடுந்தன் தாரம்நம்பு
தங்கைகளை யென்னாளும் தாங்கநம்பு
வெம்புகிற வஞ்சர்களை நம்பிடாதே
வீம்புக்குச் செலவுசெய்து வீணராவீர்
தெம்புமிகும் தமிழறவோர் தம்மைநம்பு
திருநிலத்தை நம்பிடுநீ யென்றாரண்ணா.

## 14. சிரிப்பின் சிறப்பு

அண்ணாவின் முகமலர்ந்தா லன்புள்ளூறும்
அரும்புநகை மகிழ்வினுளே விருப்பம்தோணும்
விண்மகிழும் பெருஞ்சிரிப்பால் விளையும்நன்மை
விறுவிறுத்துச் சிரிப்பெழிலோ வெறுப்புமூளும்
கண்ணாகக் காத்திடற்கே முறுவல்பூக்கும்
கருணைமுகம் தெளிவடைந்துக் காணில்நன்றாம்
அண்ணாவுக் கருள்சுரக்கும் நகைப்புமுண்டு
அன்பிணைந்துக் களித்திடவே ஆசைகொள்வார்.

## 15. சொல்லாற்றலின் திறல்

அடுக்குமொழி வடித்தெடுப்பா ரழகுசொல்லில்
அடுக்கடுக்காய் கருத்தணுக்க ளளந்துநிற்கும்
துடுக்குச்சொல் பேசிடுவோர் தூண்டும்சொல்லைத்
துள்ளுநடைப் பேச்சதனில் துண்டம்செய்வார்
அடுத்தடுத்து வீரநடை அமைத்துக்கொண்டு
அறமுறையைச் சரஞ்சரமாய்ப் பொழிந்துநிற்பார்
விடுத்திடுஞ்சொல் வீணர்களின் நெஞ்சிற்பாய்ந்து
விரைந்திடுமே மாற்றெண்ண மனத்தைநோக்கி.

## 16. திராவிடக் கழகம் கண்டது.

தென்னிலத்து நலவுரிமைக் கழகம்தன்னை
திராவிடத்துக் கழகமென மாற்றுதற்கு
நன்னிலமாய்ச் சேலமதைத் தேர்வுசெய்து
நறுந்தமிழின் பேரணியைச் சிறப்பித்தற்கு
பன்னலத்தோர் பிறமொழியின் பட்டம்நீக்கப்
பாங்குரிமைத் தீர்மானம் நிறைவுசெய்து
இந்நிலத்தைக் காத்திலேயே லிந்நாளென்னும்
எழிலண்ணா காலநிலே தெளிந்தஞானி.

## 17. எதிர்ப்பை அடக்கும் திறல்.

பணங்கொடுத்தே வாக்குகளே விலேக்குவாங்கும்
பணம்படைத்தோர் கூட்டத்தைப் பெருக்கச்செய்து
குணங்கெடுத்தே பிளவுசெய்து மடிமையாக்கிக்
கொடுமைசெயும் காங்கிரசை விரட்டியோட்ட
மணங்கமழும் திருக்குறளின் பணிமேற்கொண்டு
மதிபெருக்கி நிதிவளர்த்து மாண்புசேர்த்து
வணங்குகிற தன்மதிப்பின் வளத்தைக்கூட்டும்
வழியுணர்ந்த அறிஞரண்ணா நீடுவாழ்க.

## 18. முத்தமிழாற்றல்.

கண்கண்ட விடமெல்லாம் பேசிப்பேசிக்
களிப்பதிலே களேப்பறியா உணர்ச்சிமிக்கோர்
எண்ணற்ற மாற்றெண்ணக் களத்துள்புக்கே
எதிரற்ற சொற்போரில் வெற்றிகண்டார்
பண்டுறையும் தமிழறத்தை மறைத்துவைக்கும்
பகையுளத்தை நண்பறத்தால் விளக்கம்செய்தே
வெண்டமிழால் நாடகத்தை நடித்துக்காட்டி
விழிப்புணர்ச்சி தூண்டியவ ரண்ணாதானே.

## 19. அண்ணு அழைப்பு.

தமிழகத்தைப் பலநாடாய்ச் சொல்வோருண்டு
தன்மானம் கல்லாதார் இந்தியாவென்பார்
நமதகத்தின் பண்டைநலம் கற்றறிந்தோர்
நண்புடனே தமிழகத்தைத் திருநாடென்ருர்
சுமைசுமந்துப் பயனில்லை சொற்கள்வேறு
சூக்குமமாய்ச் செயல்நடத்தும் வீரம்வேறு
அமைவாகத் திராவிடத்தை அமைத்துக்காத்தால்
அகிலமெலாம் போற்றுமென அழைத்தாரண்ணு.

## 20. அறியாமையிருளை அகற்றியது.

தண்தமிழைச் சீர்கெடுக்கச் செய்தசூழ்ச்சி
தாரணியில் சிலதல்ல பலவேயாகும்
எண்ணற்ற மொழிச்சொற்கள் தமிழைச்சூழ்ந்து
இணைந்திருத்த லொன்ருகு மினிமைதாங்கும்
திண்தமிழுள் மூடபக்தி திணிப்புமொன்று
திறமைமிகும் தன்மதிப்பு மறைந்ததொன்று
நுண்ணியதாம் தீமைகளின் நுழைவையெல்லாம்
நுணுகியறிந் தறமுறையை நுழைத்தாரண்ணு.

## 21. மறைப்புத் திரையை நீக்கியது.

மாயைதனை மறைப்பென்பார் மயக்கமென்பார்
மாற்றுகுணக் கற்பனையைச் சித்தரிப்பார்
தாயையுமே மாயையென்பார் தாரந்தன்னை
தன்மானப் பெண்களையும் மாயையென்பார்
நாயைவிட கீழ்நிலையில் நடத்திக்காட்டும்
நாணமிலாக் கீழ்குணத்தோர் நூலைக்கோத்து
பேயெனவே நடத்திவந்த ஆரியத்தின்
பிதற்றலினை நீக்கியவ ரண்ணுவன்ருே.

## 22. பொதுப்பணியின் சிறப்பு.

மக்கள்தமின் தன்மதிப்பை வளரச்செய்து
மாண்புயரும் பகுத்தறிவைப் பெருக்கவைத்து
தக்கதொரு நாணயத்தைத் தேக்கித்தந்து
தயைமிகுந்தத் திராவிடத்தைக் காத்துநின்று
பக்குவமாய்த் தொண்டர்களை வீரராக்கி
பாங்குடையப் பெண்களையும் முந்தச்செய்து
மிக்குவரும் தீமைகளைத் தாக்கிமக்கள்
மேன்மைபெற வாழ்வமைத்த தண்ணுவன்றே.

## 23. புதுமையிற் பழமை.

அண்ணுவின் புதுமைதனிற் பழமையுண்டு
அதனூடே அறிவியக்கம் கலந்துநிற்கும்
எண்ணுத புத்துணர்ச்சி வளரத்தேர்ந்து
எழிலமைக்கக் கருத்துரைகள் வழங்கிநின்ருர்
கண்ணுகக் கற்றறிந்தோர் தெளியும்வண்ணம்
கலையறிவைச் செயலாக்கும் விளைவைக்கூறி
நண்ணுத கருத்தினரும் நண்புகொள்ளும்
நாட்டுணர்வை மிகமிகவே வளர்த்தாரண்ணு.

## 24. கோளாறும் தெளிவும்.

அன்பென்றும் பண்பென்றும் கண்டார்முன்னேர்
அவ்விரண்டின் திண்மைநிலை கண்டோரில்லை
துன்பென்றும் துயரென்றும் சொன்னரன்று
துயரதனில் துன்படைந்துத் தவிக்கக்கண்டோம்
மன்னுமொரு காங்கிரசின் மடமைதன்னல்
மதிகெட்ட வாழ்க்கைநிலை வந்ததென்றே
அன்புதவழ் தமிழ்மொழியி னுர்வத்தோடு
அருள்செழிக்கத் திறல்வளர்த்த தண்ணுவன்றே.

## 25. சூழ்ச்சியை வென்றது.

வறுமையென்றும் விதியென்றும் வகுத்துக்கொண்டு
வஞ்சனையைப் பாரதமாய் வடித்தெடுத்து
திறமையொடு பலபிளவைத் தமிழ்நூலாக்கி
தென்னகத்தைச் சீர்கெடுத்த மடமைதன்னை
அறவழியின் திருக்குறளினாற்றல் கொண்டு
அரசியலாம் திண்மையுடைப் பணிகளாற்றி
திறலமையா சூழ்ச்சிகளை வீழ்த்திநின்று
செந்தமிழைக் காத்திலரே லென்னும்நாடு.

## 26. தி. மு. க. நெறிமுறை.

ஆட்சிதனைப் பெற்றுண்டால் வளரும்சீர்மை
அரசியலின் முறைதனிலே கழகம்வேண்டும்
காட்சிபெறும் வீரர்களைச் சேர்க்கவேண்டும்
கழகமதில் நண்பரெலாம் தொண்டேபூண்டு
மீட்சியொடு மக்களெலா முணரும்வண்ணம்
மேலானக் கருத்ததனை விளக்கவேண்டும்
ஆட்சிதனின் வழிவகையைப் பெறுவோமென்று
அறவழியோ டெழுச்சிதனை வளர்த்தாரண்ணா.

## 27. கடமை, கண்ணியம், கட்டுப்பாடு.

சீலமதை ஐந்தெனவே சிறப்பித்தார்கள்
சிந்தனையின் நெறிவளர்த்தோர் பலவுண்டென்றார்
ஞாலமதின் தலைநூல்கள் முழுதுமாய்ந்தே
ஞானமுறை பெருநிலைகள் யாவும்சேர்த்தே
காலமதில் கடமைதனைக் காத்துநின்று
கனிவுமிகும் கண்ணியத்தைப் பெற்றுக்கொண்டு
சீலமுடன் கட்டுப்பா டுடனேவாழச்
சிறப்பினொடே ஆணையிட்ட தண்ணாவன்றோ.

## 28. கழகக் காவற்பணி.

கழகத்துள் கயமைசெயல் நுழையாவண்ணம்
காவலுடைத் தனிப்பொறுப்பைத் தாங்கிநின்ருர்
கழகமதே தமிழகத்தைப் பேணிநிற்கும்
கருத்துடையச் செயல்வளத்தைப் பெருக்கிவந்தார்
பழகுதற்குத் தமிழறமே வழியென்ருய்ந்துப்
பண்புடையத் திருக்குறளைத் தலைமையாக்கி
வழிவழியே காத்துவந்த வாழ்க்கைப்பண்பின்
வழிநடந்துத் தமிழகத்தைக் காத்தாரண்ணு.

## 29. தி. மு. க. வளர்ச்சி.

அடக்குமுறை பலவாற்ரு லடக்கியாண்டு
அடத்துடனே கழகமதைக் குற்றம்சொல்லி
வடக்கரசின் செயல்விளக்கத் தடையேசெய்து
வாணிபத்தில் தீமைசெயல் பலமேற்கொண்டு
மிடுக்குடைய திராவிடத்தின் சிறப்புப்பண்பை
முனைவுடனே பகைத்தடக்கத் திட்டம்கொண்டு
திடத்துடைய காங்கிரசின் போக்கைக்கண்டு
தி மு க ஆட்சிபணி தேர்ந்தாரண்ணு.

## 30. நாட்டுப் பாதுகாப்பு.

தமிழகத்தைத் தமிழ்நாடென் றுரைத்திடற்கு
தமிழனுக்குத் தனியுரிமை கிடையாதென்று
நமைகுறித்துப் பிறநாட்டார் கூறிடற்கு
நாவேது நம்நாடு நமதேயாகும்
தமிழ்நாடு தமிழ்நாடே பிறநாடல்ல
தமிழகத்து மக்களுக்கே உரிமையுண்டு
நமதுரிமை ஆட்சியையெந் நாளும்காப்போம்
நண்புகுறள் வழிநடப்போ மென்ருரண்ணு.

## 31. உணவுப் பொருள் தட்டுப்பாடு.

ஆதிக்கத் திமிரதனு லச்சம்நீங்கி
ஆட்சிதனி னதிகார மமதைகொண்டு
சோதிக்கத் திறமையற்று மக்களுண்ணும்
சோற்றரிசி வகைகள்தனைச் சீர்கெடுத்து
நீதிக்கே மாறுபடும் கட்டுப்பாட்டால்
நிறைசெல்வம் சேர்த்தெழுந்த தேசீயத்து
ஆதிக்கக் காங்கிரசை அடக்கும்வீர
அறிஞரண்ணு பிறந்திலையேல் தமிழ்நாடேது.

## 32. கொடியின் தத்துவம்.

இருட்டினிலே ஒளிபிறத்த லியற்கையாகும்
இரவுபகல் நடைமுறையே இருவண்ணம்தான்
கருப்பினெடு சிகப்பதனில் காணுமைந்தும்
கருமைதனில் பச்சையுண்டு சிகப்பில்மஞ்சள்
இருப்பினிலே வெள்ளையது நான்கிலுண்டு
இறைமைசெம்மல் இறைவிநீல மென்பாரோர்சார்
விருப்புடைய சமநிலையில் கருமைசெம்மை
வினைத்தூய்மை தமிழ்க்கொடியைக் கண்டாரண்ணு.

## 33. சின்னத்தின் சிறப்பு.

பொருள்கவரும் குணத்தினரைத் திருத்தவேண்டும்
பொழுதளவு தொழில்செய்தே செழிக்கவேண்டும்
பொருள்குறைவால் கடன்வாங்கும் காங்கிரசாட்சி
பொதுமக்கள் செழிக்கபொருள் வழங்கமாட்டார்
பொருள்குவிக்கும் தனியாட்கள் மிகுந்துவிட்டார்
புவிமகிழ பொதுமைநலம் காணவேண்டும்
பொருள்விரும்பும் தமிழர்களே விழிப்பீரென்றே
புகழுதய சூரியனைப் போற்றிநின்றூர்.

## 34. எதிர்ப்புக் கெதிர்ப்பு.

இந்திதனை எதிர்த்துநின்ற காலந்தன்னில்
இடருடைய பலசிறையில் பூட்டிவைத்தே
விந்தைசொலும் பேரவையைக் கலைத்துத்தள்ள
வீணர்களை கூலிகளைத் தூண்டிவிட்டே
சொந்தமுடை தமிழகத்துப் பெயரைச்சூட்ட
சொந்தமிலை என்றவட தலைவர்காண
நம்தமிழை வளர்த்தினிய பெயரைச்சூட்டி
நம்நாட்டை வெற்றிகொள்வே னென்ருண்ணு.

## 35. சிறையின் பயன்.

அடக்கிடற்குச் சிறையென்பார் அண்ணுவுக்கு
ஆய்வுகலைக் கூடமதா யமைந்ததங்கு
மடக்கிடவே சிறைசெய்வார் மாற்ருர்தம்மை
மதிவளரும் நூலகமாய்க் கொண்டுயர்ந்தார்
துடுக்கினரைத் திருத்துதற்கே சிறையென்பார்கள்
துடிப்புணர்ச்சி வளர்ந்தறிவில் கலந்ததங்கு
இடுக்கினிலே அடைத்துவைத்த வடவர்கூற்றல்
இடுக்கணுடை மக்கள்நிலை தெளிந்தாரண்ணு.

## 36. வாணிப ஊழல் விளக்கியது.

காங்கிரசார் தமிழகத்தை இருபதாண்டு
காத்துவந்தார் இந்தியநா டொன்றேயென்று
வீங்கிடுமோ ராட்சிதனில் தரகுமண்டி
விலையேற்றக் கள்ளமுடைக் கட்டுப்பாடு
தீங்குடைய வாணிபத்துப் பொருளிலெல்லாம்
தெருமண்கல் கலந்துவிற்ரு ருணவுதன்னில்
காங்கிரசின் சீர்கேட்டை விளக்கிக்கூறி
காத்ததனுல் அறிஞரண்ணு தலைவரானுர்.

## 37. வீண் செலவு.

ஆங்கிலத்தின் காங்கிரசைத் தலைமேல்வைத்து
அதன்வலிவால் ஆங்கிலத்தை வெறுத்துப்பேசி
பாங்குடைய விடுதலையின் பெயரைக்கூறி
பலநாட்டில் கடன்வாங்கி பதட்டமோடு
தேங்கியதாம் பொருளையெல்லாம் வடக்கேவாழ
செலவுசெயும் தீவழியைச் சிந்தித்தாய்ந்து
வீங்கியதோர் நிலையினிலே வீரத்தோடு
விண்ணதிர விளக்கியவ ரண்ணுதானே.

## 38. நெசவாளர் நெருக்கடியை நீக்கியது.

கைத்தறியின் தொழிலதனை நம்பியுள்ள
கண்ணியத்துப் பெருங்குடும்ப மக்களெல்லாம்
கைத்தறியின் தொழிற்பஞ்சம் வந்தபோது
கடும்பசியைத் தாங்காமல் கதரக்கண்டே
கைத்தறியின் துணிகள்தமைத் தோள்மேல்தாங்கி
கண்கண்ட விடமெல்லாம் சுற்றிவிற்றே
கைத்தறியின் தேக்கமதைக் குறைத்துக்காத்து
கடும்பசியை நீக்கியவ ரண்ணுவன்றே.

## 39. தொழில்வளச் சிறப்பு.

வேளாண்மைத் தொழில்வளத்தைப் பெருக்கச்செய்து
விளைபொருளை வளர்த்திடவே முந்தவேண்டும்
கேளாண்மைப் பெருக்கத்தால் நிலங்கள்தம்மை
கெழுதகையின் துணைகொண்டே திருத்தவேண்டும்
தாளாண்மைத் திறத்தமைவால் உணவைத்தேக்கி
தக்கநிலை காண்பதுவே தமிழனாட்சி
வேளாண்மை பகுதியொடு பொதுமைப்பண்பை
வீரமொடு வளர்த்திடுவீ ரென்றாரண்ணு.

## 40. அரசியல் தந்திரத்தின் நுணுக்கம்.

சூதுசெய்தே தமிழர்களை வஞ்சிக்காமுன்
சூதர்களின் தீயசெயல் கண்டாரண்ணா
வாதினையும் போர்குணத்தோர் தூண்டாமுன்னர்
வஞ்சகத்தின் வழியறிந்தே அடக்கிவைத்தார்
மோதவரும் வகுப்பியக்க மூர்க்கம்தன்னின்
முழுவலிமை கண்டொடுக்கும் திறத்தினோடு
நீதிவழி நடுநிலைமை நிலைக்கச்செய்து
நேர்மைமிகு தந்திரத்தின் தலைவரானார்.

## 41 முன்னேற்றத்தின் சீலம்

முன்னேற்றத் துறையுணரப் புலமைவேண்டும்
முதுபுலவோர் முறையறிந்தே முந்துவார்கள்
நன்னோக்கம் பூண்பதுவே நாட்டின்சீலம்
நடுநிலையாய் வாழ்ந்திடற்கு வழிகளுண்டு
பன்னோக்கம் தேவையில்லை பணிந்துவாழும்
பயனுடைய தொழில்நலத்தைப் பேணவேண்டும்
முன்னோரின் நுண்மைவழி முறையேசென்றால்
முன்னேற்றம் பெற்றிடலா மென்றாரண்ணா.

## 42. ஆதிக்கத்தைத் தடுத்தது

தில்லிதனைக் காத்துவந்த சவகர்நேரு
தென்னகத்துத் தமிழர்களை யிழித்துச்சொன்ன
பொல்லாப்பைத் தானுணரப் புகையின்வண்டி
பூந்தமிழன் நிலத்தினுளே புகுதல்வேண்டாம்
நல்லாணை யிட்டிடுவேன் நாக்கைக்காப்பீர்
நடுநிலையாய் நடந்திடுவீர் நேருவேநீர்
வல்லமையைக் காட்டாதீர் வழுக்கிவீழ்வீர்
வாய்மையிது வென்றெழுந்த தண்ணாவன்றோ.

## 43 எழுச்சிமிக்கக் கழகப்பணி

கழகத்தைக் கலைத்துவிடக் குழப்பம்செய்து
கடிந்துரைத்துப் பகைவளர்க்கும் கருத்துள்ளோர்கள்
கழகத்தின் மீதுபல குறைகள்கூறி
கலகமதைச் செய்திடவே முந்தக்கண்டு
தழல்மிஞ்சு மெரிமூண்ட நெஞ்சத்தோடு
தாவியெழு மெழுச்சியண்ணா தமிழைக்காக்க
கழகத்தில் தனித்துநிற்கும் நிலைவந்தாலும்
தமிழகத்திற் கெனதுயிரைத் தருவேனென்றார்.

## 44 வீர உறுதி மொழி

திருவிடத்தைக் காத்திடுவேன் திறலைச்சேர்ப்பேன்
திசையெட்டும் தமிழ்பரவப் பணிகள்செய்வேன்
தருபெரியோர் தடுத்திடினும் மறுத்திட்டாலும்
தந்தையென்போர் எதிர்த்திடினும் தயக்கங்கொள்ளேன்
ஒருமுடிவைக் கண்டுவிட்டேன் மாறமாட்டேன்
உண்மைக்கே மாறாக நடப்போர்தம்மை
ஒருபொழுதும் நண்புகொளேன் தமிழனாட்சி
உரிமையுடன் பெற்றிடுவே னென்றாரண்ணா.

## 45. இதுவுமது

இந்திமொழி நுழைந்திடற்கே ஒப்பமாட்டேன்
இடர்செய்வோ ரீண்டிருப்ப தறிந்தேஉள்ளேன்
முந்துகிறே னெதுவரினும் வந்திடட்டும்
மூழுகிற பகையெரியா லுயிர்போகட்டும்
சிந்துகிற குருதியினால் தமிழ்வாழட்டும்
சிந்துவரை தரணியெலாம் தமிழினாட்சி
நின்றிடவே பணிபுரிவே னிந்திமாயை
நிழல்படவு மீண்டிடத்தைத் தந்திடேனே.

## 46. வீரப்பொலிவின் சிறப்பு

மொழியெனுமோ ரியற்கையொலி தமிழொன்றேயாம்
முன்னேரின் வழிவந்தோர் முறைமைவிண்டார்
வழிதனிலே பலவகையாம் மொழிகள்தோன்றி
வாய்குழறிப் பேசிடினும் தாய்மையொன்றே
மொழிபுரியாப் புல்லியர்கள் முதல்நூல்காணர்
முதுதமிழின் இலக்கணநூல் முறைமைகல்லார்
இழிவுநிலே தமிழகத்துள் புகுதவந்தால்
எதிர்நின்று போர்தொடுப்பே னென்ருரண்ணு.

## 47 தலைமையின் அமைப்பு

வழக்கதனின் வாய்ப்பினிலே விளக்கங்கண்டு
வழியமைக்கும் திறனறிந்து நண்புகொண்டு
தழைக்குமொரு செயலாற்றும் துணைகள்பெற்று
தாய்நாட்டின் தனியறிவைச் சிந்தித்தாய்ந்து
வழக்கமுடை மனையறத்துள் கலந்துநிற்கும்
வழியதனைத் தேர்ந்திடவே முனைந்தறிந்து
முழக்கமிடும் முன்னேற்றத் துறையில்நின்று
முனைவுடனே தனித்தலைமை பூண்டாரண்ணு.

## 48. தில்லி மேலவை உரிமை

தேர்தலிலே போட்டியிட்ட போதுகாஞ்சித்
தொகுதிதனின் காங்கிரசுத் தோழர்சூழ்ந்து
தேர்தலினைச் சீர்கெடுத்துத் தீங்கைச்செய்து
தேவையுளத் தருணத்தைத் தடுத்தபோது
ஊர்தனிலே சொந்தமுள்ளத் தலைமையண்ணு
ஊக்கமொடு தில்லிதனின் மேலவைக்கு
பார்மகிழச் சென்றிலையேல் தமிழர்வாழ்வு
பாழடைந்து சீர்கெடுதே லுறுதியன்ருே.

## 49 தலைமைப் பண்பின் சிறப்பு

சென்னைதனின் நகராட்சித் தேர்தல்தன்னைச்
சிறப்புடனே நடத்திவெற்றி கண்டுமக்கள்
இன்புறவே நகரசெயல் நிகழத்தக்க
இனவழியின் துணைகள்பல விணைத்துக்கொண்டு
அன்புறவே தமிழாட்சி யமைக்கத்தக்க
அரசியலின் நுண்ணறிவால் ஆட்சிதேர்ந்து
இன்பநிலை தனிச்செங்கோ லோச்சுமண்ணு
இந்நிலத்தே தலைமைபெற லியற்கைதானே.

## 50 சொல்லின் சிறப்பு.

அண்ணுசொல் லுடன்பிறந்தோர்க் கென்றேயல்ல
அழகுடைய தம்பியெனி லிளைஞனல்ல
அண்ணனொடு தம்பியென்று பிணைந்துநின்று
அன்பிணையும் நண்பினையே அளந்துகாட்டும்
அண்ணுவைப் பெற்றெடுத்தோ ரண்ணுவென்பார்
அறிவுமலி அக்கைகளு மண்ணுவென்பார்
அண்ணுசொல் நாட்டினுக்கே பொதுமையாகும்
அண்ணுவென் றழைத்தழைத்து மகிழுவோமே.

## 51. தமிழக ஆட்சி அமைப்பு.

செந்தமிழைப் பைந்தமிழாய்ச் சிறக்கச்செய்து
சீரெழிலின் தமிழாட்சி அமைத்துவைத்து
எந்தையென அரியணைமேல் செங்கோலேந்தி
எழிற்கலைஞர் திருகருணு நிதியினேடு
சொந்தநெடுஞ் செழியன்மதி யழகன்நீதி
சொல்லுடை மாதவன்முத்து சாமிபாட்சா
முந்தைகோ விந்தசாமி சத்யவாணி
முத்தமைந்த அமைச்சமைத்த தண்ணுவன்ருே.

## 52 விலையேற்றத்தைக் கண்டித்தது

விலையேற்றத் திடரதனை விளக்கிக்கூறி
விதிமுறைக்கு மாறின்றி விற்கத்தக்க
நிலையான விலையதனை அமைக்கச்சொன்ன
நேரண்ணு தனைப்பிடித்து சிறையுள்வைத்தார்
கலைஞர்களும் புலவர்களும் செல்வர்தாமும்
கனிமொழியில் விலையுயர்வை விளக்கும்போது
மலைவின்றி சிறைசெய்தார் எழுந்தார்மக்கள்
மாற்ருரு யெண்ணுதீ ரென்ருரண்ணு

## 53. தமிழரணின் சிறப்பு

தமிழகத்தைக் காத்தமன்னர் பலபேருண்டு
தனிமுடியால் பலகண்டம் தாங்கிநின்ருர்
தமிழரசுக் கரண்மனைகள் காவற்கூடம்
தகுமெழிலா மரியணைமேல் செங்கோலேந்தி
தமிழ்முறையி ல்கழிகளு மரணும்தேக்கி
தனிக்காவல் படையுடனே தரணிஆண்டார்
தமிழகத்துள் பிறஆட்சி நுழையாவண்ணம்
தமிழரணைத் தேக்கிவைத்தோ ரண்ணுவன்ருே.

## 54. சீரணிப் படை.

தொழிலதனைச் செய்திடற்கே வணங்காக்கூட்டம்
தோதுடையத் தொழில்செய்து வாழுதற்கும்
பழிசுமத்தி வஞ்சிக்கும் வறுமைதன்னைப்
பலவிளைவால் பொருள்தேக்கி நீக்குதற்கும்
வழிகண்டு சீரணியாய்ச் செல்லுதற்கும்
வகைவகையாய்த் தொழில்வளத்தைக் காணுதற்கும்
செழிப்புடனே தமிழ்நாடு செழிப்பதற்கும்
சீரணியின் படைகண்ட தண்ணுவன்ருே.

## 55. மதுவிலக்கு

அறிவதனை மயக்குகின்ற மதுவினத்தை
அங்காடி விற்பனையா யாக்கிக்கொண்டு
திறலகற்றும் வீண்சண்டை தீங்குசெய்யும்
தீயவழிச் சச்சரவு களவும்சேர்ந்தே
அறவழியைத் தாக்குவதைக் கண்டகாந்தி
அகற்றினர் மதுக்கடையை யன்பினொடு
புறமுறையில் மீண்டுமதைப் புகுத்தவந்த
புல்லியரைத் தடுத்தண்ணா புனிதரானார்.

## 56. இருமொழிச் சிறப்பின் தன்மை.

ஆங்கிலம்தான் உலகமொழி யென்றேயாய்ந்து
அடுத்ததுணை மொழிதமிழாய்த் தேர்வுசெய்து
தேங்கிநிற்கும் தமிழுணர்வைத் திறமையோடு
தேயமெலாம் கற்றிடவே முறைமைவிண்டார்
ஆங்கிலத்தின் பகுத்தறியும் பொதுமைகொண்டு
அகிலமதை அளந்தறியும் நிறைவுகண்டே
ஆங்கிலத்தைப் பொதுமொழியென் றாக்கித்தந்து
அதனுடனே தமிழதனை இணைத்தாரண்ணா.

## 57. சுயமரியாதைத் திருமணம்

சீர்திருத்தத் திருமணத்தைச் சட்டம்செய்தார்
சீலமுளக் கலப்புமணம் சிறந்ததென்றார்
தார்புனையும் வீரமிகு குழந்தைப்பள்ளி
தனில்வளரும் சேயர்களே சிறந்தோரென்றார்
நேர்மைமிகு தமிழறமே சிறந்துவாழ
நிலையாக ஒற்றுமையே நிறைந்துசூழ
ஆர்வமொடு கழகமுறை அமைத்துமக்கள்
ஆட்சியினால் குடும்பகலை வளர்த்தாரண்ணா.

## 58. உலகத் தமிழ் மாநாடு.

உலகமதில் தமிழ்வளரு முண்மையான
ஊக்கமதைக் கண்டறிய எண்ணுங்காலே
உலகதமிழ் மாநாட்டை நடத்திக்காட்டும்
உரிமையண்ணு தனக்கியல்பா யமைந்ததாலே
உலகிலுள தமிழறிந்த சிறந்தோர்தம்மை
உளமகிழ்வோ டண்டழைத்துத் தமிழகத்தின்
நிலவுதமிழ்ப் பண்புகளை விளக்கிக்காட்டி
நீடுலகுக் கொளிவர்த்த தண்ணுதானே.

## 59. உலக சுற்றுலா

அமரிக்கா உலகமதில் சிறந்ததென்பார்
அதனுடனே ருசியாவு மிணைந்தேநிற்கும்
தமருக்கே பொறுமைமிகு சப்பான்பிராஞ்சு
தயைமிகுந்த பிரிட்டனுடன் செருமன்சைன
அமருக்கே முந்தியதா யிருந்தகோலம்
அண்ணுவின் சுற்றுலாவா லமைதிதோன்றி
தமருடைய நாடுகளாய்ப் பொதுமைநோக்கும்
தன்மதிப்பை வளர்த்துலக அறிஞரானர்.

## 60. தலைநகரச் சீரமைப்பு.

சென்னைதனின் சீரெழிலைக் காத்திடற்கு
சிறுசிறுவாம் குடிசைகளின் சிறுமைவாழ்வு
பன்னிலத்தோர் குறிப்பதனுள் நிலைத்திடாமல்
பலகுடிசை களைமனையா யமைத்துத்தந்தார்
தென்னிலத்தின் கடல்வளத்தைச் சிறப்பித்தற்கு
தேர்ந்த பலதுறைமுகத்தை வளமதாக்கி
எந்நிலத்து வாணிபமும் இணையும்வண்ணம்
எழிற்றமிழ்நாட் டுயர்வதனை வளர்த்தாரண்ணு.

# அண்ணா ஆட்சிப்பணி அறுபது.

1. தமிழாண்டைத் தைமுதலே கணக்குவைத்து
தமிழகத்தில் ஆண்டுபணி தொடங்கவேண்டும்

2. முதற்சங்கத் தாண்டெண்ணைக் கணக்கெடுத்து
முறையாகத் தமிழாண்டைத் தொடங்கவேண்டும்

3. தைமுதலே தமிழாண்டைக் காட்டும்நல்ல
தனியேட்டின் நாள்காட்டி உடனேவேண்டும்

4. தமிழ்ப்புலவர் கல்லூரி மாணவர்க்கு
தகைமிக்க மானியமா யுணவுதந்து
மக்களிடை தமிழறிவைப் பெருக்கவைத்து
மனைவளத்தைச் சீர்படுத்தி மகிழவேண்டும்

5. தமிழ்படித்துப் பயிற்சிபெற்ற புலவர்கட்கு
தனிப்பட்டம் சிறந்தனவாய்த் தந்துநாளும்
தமிழறிவின் மரியாதை வழங்கி மேலாம்
தரமுடனே புலமைதனைக் காத்தல்வேண்டும்

6. தமிழ்ப்புலவர் கல்லூரி தனிலேநல்ல
தகைமிக்க ஆங்கிலத்தைச் சேர்க்கவேண்டும்

7. ஆங்கிலத்தின் கல்லூரிதனிலே கற்கும்
அனைத்துமொழி தனைக்கற்க வாய்ப்புவேண்டும்

8. இறைவணக்கம் தமிழினிலே இயங்கவைத்து
இறைகோவில் நூலகமாய்த் திகழச்செய்து
இறையொருமைப் பண்பாட்டைக் காத்தலோடு
இறைவனெனில் தலைவனென்றே பயிற்றல்வேண்டும்

9. தமிழ்மறைநூல் திருக்குறளா யிருத்தல்வேண்டும்
தகுதியொடு திருக்குறளுக் கிணங்கவேண்டும்

10. மனைதோறும் ஒருகுறளை எழுதவேண்டும்
மக்களெலாம் குறள்படித்துத் தெளியவேண்டும்

11. வண்டிகளில் குறள்மணக்கும் வழக்கம்போல
வாணிபத்துக் கடைகளிலும் தேநீர்சாலை
வாய்மையுடை பொதுமனையில் எழுதவேண்டும்

12. தமிழ்படித்துப் பயிற்சிபெற்ற தகுதியோரை
தலைமைபெறும் அலுவல்களில் சேர்க்கவேண்டும்

13. தமிழறத்து நீதிமன்றம் அமையவேண்டும்
தமிழினிலே வழக்குமுறை நிகழவேண்டும்

14. தமிழகத்திற் கொருதலைமை நிலைக்கவேண்டும்
தனியெவரும் தலைமைதனக் கிணங்கவேண்டும்
தேவைதனைத் தலைவரகம் தேடித்தந்து
திறமையொடு நாட்டறத்தைக் காத்தல்வேண்டும்

15. பலகுழுவும் ஒருநிலையாய்த் திகழவேண்டும்
பலகலையை பலகுழுக்கள் வளர்க்கவேண்டும்

16. தொழிற்கலையை வளர்க்கின்ற நூல்கள்வேண்டும்
தொழிற்குடும்பம் செழிக்கின்ற விளக்கம்வேண்டும்
வீண்செலவை தொழிற்குடும்பம் நீக்கிநாளும்
விரைந்துபொருள் சேர்ப்பதிலே ஊக்கம்வேண்டும்

17. திரைப்படங்கள் தொழிற்றுறையைக் காட்டவேண்டும்
தொழிற்பழக்கம் திரைப்படத்தால் வளரவேண்டும்

18. பெண்கூத்துத் திரைப்படங்கள் மாறவேண்டும்
பெண்களினல் மனையறத்தைப் பேணிக்காக்கும்
பெருமையுள படங்கள்தனைப் பெருக்கவேண்டும்

19. பெண்ணுறுப்புக் கற்பனைநூல் திருந்தவேண்டும்
பெண்திறமை நுண்கலைகள் பெருகவேண்டும்
மகளிர்களைத் தங்கையெனக் காணவேண்டும்
பெரியோரைத் தாயெனவே மதிக்கவேண்டும்

20. காணுகின்ற தமிழ்நூலில் மகளிர்கற்க
நாணுகின்ற சொற்களினைத் திருத்தவேண்டும்
பேணுகின்ற தமிழ்நூலின் இயற்கைக்காட்சி
பெருக்கெடுத்துக் காணுவதைப் பழக்கவேண்டும்

21. காமமதைத் தூண்டுகிற கதைகள்பேச்சு
காமநிலை கட்டுரையால் பெண்மைகெட்டு
கவலைதவழ் பலகுழந்தை பெற்றுக்கொண்டு
கடமைபணி தவறுவதை மாற்றவேண்டும்

22. காதல்குணப் பொதுமைநலம் வளரவேண்டும்
கனிவுகொளும் நண்புமுறை தவழவேண்டும்
பொதுமைநலம் காதலெனப் புரியவேண்டும்

23. வீணுக நிலமிருக்கும் பகுதிதன்னை
விளைநிலமா யாக்குதற்கு முயலவேண்டும்
சீரணியின் படைகொண்டு திருத்திதந்து
சீலமொடு வளமதனைக் காத்தல்வேண்டும்

24. வேளாண்மைக் கூட்டுறவை வளர்க்கவேண்டும்
விவசாயம் முதற்றொழிலா யாக்கவேண்டும்
விளைபொருளை தமிழரசு கண்காணித்து
விலையமைத்துப் பொருள்மதிப்பைக் காத்தல் வேண்டும்

25. கைத்தறியின் கூட்டுறவைப் பெருக்கவைத்து
பிறநாட்டின் துணிவரவைத் தடையேசெய்து
பலதிறத்தால் நெசவாளர் வாழத்தக்க
பண்புமுறை யமைக்கில்பஞ்சம் தொலையும்தானே

26. ஆற்றிலணை ஆங்காங்கே கட்டித்தேக்கி
அதனாற்றைப் பெருக்கிவளம் காத்தல்வேண்டும்

27. ஒகினக்கல் காவேரி தன்னைத்தேக்கி
ஓடுகின்ற மிகுநீரைக் கிழக்கேஓட்டி
உணவுவகை பயிர்வளத்தைப் பெருக்கவைத்தால்
ஒருபோதும் உணவுபஞ்சம் தோன்றிடாதே

28. சாதிமத சமயத்தைப் புகுத்தும்பள்ளி
தனையரசே மேற்கொண்டு நடத்திமக்கள்
சமநிலையில் மனிதரென வாழத்தக்க
நண்புமுறை பேரறிவைப் பெருக்கவேண்டும்

29. ஸ்ரீஎன்ற பிறகருத்துச் சொல்லைநீக்கி
திருவென்ற மரியாதைச் சொல்லைச்சேர்த்து
செழுந்தமிழின் சிறப்பதனைக் காத்துநின்று
வணக்கத்தால் நண்புமுறை வளர்த்தல்வேண்தம்

30. மாற்றுகுணத் தோழர்களின் குணத்தைமாற்ற
மாணவர்கள் வரலாற்றைக் கூறிக்கூறி
மாண்புடனே தமிழ்மரபைக் காத்தலொன்றே
மனையறத்துத் தமிழகத்தை காத்ததாகும்

31 உற்றவர்கள் துணைகொண்டு வருந்திவாழும்
உறுப்பிழந்தோர் தனைசேர்த்து காத்தற்கான
உணவுமனை தனையமைத்து உறுப்பிழந்தோர்
ஒருசேர காத்திடுதல் கடமையாகும்

32. சூதாடும் வடபழக்கம் நீக்கவேண்டும்
சோம்பலறும் விளையாட்டைப் பழக்கவேண்டும்

33. விளையாடும் பொதுஇடங்கள் பெருகவேண்டும்
விளையாடிக் களிப்பதனை வளர்க்கவேண்டும்

34. சுற்றிலுலே மலங்கழிக்கும் கூடம்கட்டி
சுற்றரணுள் பன்றிகளை நிறையசேர்த்து
மலமெடுக்கும் தொழிலதனை மாற்றிநல்ல
எருதருமோர் பன்றிபண்ணை அமைத்தல்வேண்டும்

35. உணவுவிற்கும் சாலைபல இருத்தல்போல
உறவுதரும் சாலைகளைத் தோன்றச்செய்து
பகையுளத்தை உறவாடப் பழக்கல்நன்ரும்

36. சித்தமுறை மருந்துகளை சிறப்பாய்ச்செய்து
திறமையினர் கடைகள்பல திறந்துவைத்து
சித்தமுறை தமிழ்மருந்தைப் பெருக்கவேண்டும்

37. தெருவதனில் மின்விளக்குத் திகழ்தல்போல
திருத்தமொடு குழாய்தண்ணீர் உதவல்போல
ஒழுக்கமொடு குப்பைகளை நீக்கல்போல
தெருதோறும் குறளறத்தைப் பரப்பும்நல்ல
வானொலியின் பொறிகள்தனை இணைத்தல்நன்ரும்

38. மகளிர்களின் மனையறநூல் தோன்றவேண்டும்
மருவத்துவமாம் உணவுமுறை விளக்கவேண்டும்
உணவுதனின் பொருள்குணத்தை உணர்ந்துசேர்க்கும்
உயர்கலையை மகளிர்கற்றல் ஒழுக்கமாமே

39. பெண்களுக்குப் பொதுப்பதவி ஒதுக்கித்தந்து
பெண்களினுல் குடும்பநலம் வளரத்தக்க
பெருநிலையை உண்டாக்கல் பெருமைதானே

40. பெண்ணலுவல் மனைதனியே அமைத்துத்தந்து
பெண்ணலுவர் தாய்மைகளைப் பேணிக்காத்து
பெண்கள்தமின் முன்னேற்றங் காத்தல்வேண்டும்

41. அன்ருடம் மக்கள்குறை விண்ணப்பத்தை
அவ்வப்போ தறிந்துமுறை விளக்கம்தந்து
சிறுவழக்கை வளராமல் தீர்த்துவைத்து
கருத்ததனை உடன்விளக்கி அனுப்பவேண்டும்

42. தன்மதிப்பைக் காத்துவரின் வழக்குவாரா
தரமறிந்துப் பொறுத்துகொளின் பகைமைவாரா
நிலையறிந்துச் செலவுசெயின் வறுமைவாரா
நெடுவழியை முன்நோக்கி வாழவேண்டும்

43. வாணிபத்தின் தரகுநிலைமாற வேண்டும்
பணிசெய்யும் தொழிற்பழக்கம் வளரவேண்டும்
தொழிற்பணிக்கு நிறைகூலி அமைத்துத்தந்து
தொழிலாளர் சமுதாயம் வளர்க்கவேண்டும்

44. அரிசிவகை பருப்புவகை எண்ணைபோன்ற
உணவுவகை தனிக்கடைகள் அமையச்செய்து
அதில்குறைகள் கலவாமல் காத்தல்வேண்டும்

45. பள்ளிகளின் ஆசிரியர் குடியிருப்பைப்
பள்ளிகளின் சார்பினிலே அமைத்துத்தந்து
பிள்ளைகளோ டுறவாடிக் களிக்கவேண்டும்

46. கல்லூரி ஆசிரியர் குடியிருப்பைக்
கல்லூரிக் கருகினிலே கட்டித்தந்து
கடமையுடன் மாணவரைக் காத்தல்வேண்டும்

47. மருத்துவத்தின் மனையருகே மருத்துவர்கள்
மாட்சிமனை குடியிருப்பை அமைத்துத்தந்து
மதியுடனே அடுத்தடுத்து கண்காணிக்கும்
மாண்புக்கு வழிசெய்தல் மருத்துவம்தான்

48. அலுவலகத் தொழிற்றுறையோர் வாழும்வீடு
அலுவலகத் தருகினிலே அமைத்துத்தந்து
அறியவரு வோர்சந்திப் பாக்கவேண்டும்

49. கண்ணுடி நச்சுப்பொருள் கடையில்உண்ணும்
'கனிவுபொருள் விற்பனையைத் தடுத்தல்வேண்டும்

50. சந்தைகளின் விற்பனையைப் பெருக்கிநல்ல
விளைபொருளை சந்தைகளில் விற்கவேண்டும்

51. மாநிலத்தில் விலேஒன்ருய் இருத்தல்வேண்டும்
அளவுநிறை தரமதனைக் காத்தல்நன்ரும்

52. தெருபெயர்கள் ஊர்பெயர்கள் யாவும்நல்ல
தெளிதமிழின் வரலாருய் வைத்தல்வேண்டும்

53. மலேவளத்தை சிறப்பாகப் பெருக்கவேண்டும்
மலேவாசி தடையதனை நீக்கவேண்டும்

54. செல்வர்தமை மலேமீது வாழச்செய்து
சீர்பணியால் தொழிலமைப்பை வளர்க்கவேண்டும்

55. கடலோரம் படைபயிற்சி அமைத்துத்தேக்கி
படைவீரர் கடல்விளைவை சேர்த்தல்வேண்டும்

56. பொறித்துறையில் தொழில்வளத்தைக் காக்கத்தக்க
பொறியமைக்கும் கலேக்கூடம் தோன்றவேண்டும்

57. கூட்டுறவால் பொருள்வளத்தைத் தேக்கும்நல்ல
குணமதனை மக்களிடை வளர்க்கவேண்டும்

58. தொழிலமைப்பில் ஒவ்வொருவர் ஒன்றைச்செய்து
துயரகன்று வாழ்வியற்றப் பழக்கவேண்டும்

59. சிடுசிடுத்துச் சொல்முழக்கும் சீற்றத்தோடு
சீறிவிழுந் தடித்திடற்கு முந்திவந்து
பகைமூட்டும் குழுக்களொடு சேர்ந்திடாத
பண்பதனை வளர்த்தறத்தைப் பயிற்றல்வேண்டும்

60. இறைமைதனை யுள்ளத்தே இறைஞ்சிநாளும்
எழில்நாட்டுக் குறுதுணையாய் இருத்தல்வேண்டும்

பதினைந்து ஆண்டுக்குள் மேலேசொன்ன
பற்பலவும் நிறைவுபெற்று சிறக்கும்தானே
உடனடியாய்ச் செய்வனவும் உண்டுஇஃதில்
உயர்பொருளை வளர்த்துசெயும் செயலுமுண்டு
அமைதியுடன் தமிழரெலாம் அன்புகாத்தால்
அண்ணவா லத்தனையும் நிகழக்காண்போம்



# அண்ணு விழைவு அறுபது.

## 1. நாட்டின் சிறப்பு

திருநாடு வளநாடு திசைபுகழ் கலைநாடு
தீந்தமிழ் பொழியும் நாடு
திசையெலாம் பணிநாடு திருவருள் நிறைநாடு
தேடரும் புலமை நாடு

அருள்கனிந் தொழிர்நாடு இருள்கடிந் திடுநாடு
அன்புநிலை நின்ற நாடு
அறமான கடமைதனை யனுதினம் செயலாற்றி
அதன்பயன் சூடும் நாடு

கருவூல மெனவாறு சுவையோடு வளர்நாடு
கனிகளே நிறையும் நாடு
கமழ்மணம் குலவுமலர் பொழில்நிறை தருநாடு
கடிமனை பொலியும் நாடு

பெருமனித ருறைநாடு அறிவுதரு மதிநாடு
பிரியமொடு வாழும் நாடு
பேரின்ப மாகவே வாழ்வின்ப மேகாக்கும்
பெருதமிழ் நாடு தானே

## 2. நாட்டின் தாய்மொழி.

நாட்டினுடை மொழியொன்றி லறிவுகாணும்
நாயகமா முலகமொழி யுதவிக்காகும்
நாட்டமுறும் தமிழ்மொழியே கல்வித்திட்டம்
நாமேற்கும் துணைமொழியோ ஆங்கிலம்தான்
கோட்டமிலா திம்முறையே முதன்மையாகும்
குணமுடனே முறையறிந்துத் தெளிதல்மேலாம்
வாட்டமிலா கலைப்பள்ளி தனிலே தேர்ந்து
வகையுடனே அறிவுபெறல் வாய்ப்பதாமே.

## 3. நாட்டின் உறவு

ஒருநாடோ டொருநாடு நண்பினேடு
உறவொன்றி உண்மையுடன் கலந்துநின்று
பொருள்தேவை யெனிலளவாய் வாங்கிமக்கள்
போக்கறிந்துச் செயலாற்றித் தெளிவினேடு
திருநாடா யோங்கிடவே செழிக்கச்செய்து
தேவையெலாம் நிறைவுபெறும் சிறப்பைத்தேக்கி
பெருநாடென் றுலகமெலாம் போற்றிநிற்பப்
பேணுவதே நாட்டுறவின் பெருமையாமே.

## 4. அகப்பொருள் விளக்கம்.

அகநூல்கள் மிகமிகவே தோன்றவேண்டும்
அதில்வாழ்வை யிணைத்தறிவை விளக்கவேண்டும்
இகமதிலே பெண்ணுண்கள் நண்புகொள்ளும்
இலக்கியநூற் கிலக்கணமும் காணவேண்டும்
தகுதியுடை மனம்புத்தி சித்தமாதி
தனியறிவின் பேராற்றல் தம்மினேடு
அகத்திலுறை பொதுமையுள்ளத் தாற்றல்தம்மின்
அறிவுநிலை அகத்தாய்வைப் பெருக்குவாயே.

## 5 இதுவுமது

அகத்துறுப்பின் குணத்தியற்கை ஆய்வுதன்னை
அகிலத்தோ டிணைத்ததனை விளக்கம்செய்து
அகத்தைத்தான் நடத்தும்பே ராற்றல்பெற்று
அழகான உள்ளத்தின் தொடர்புகொண்டு
மிகவெளிதா முலகசெயல் வகைநூல்தன்னை
மேன்மையொடு பொதுக்காதல் முறைமையோடு
அகநூலின் பொருளறிந்தே அன்புவாழ்வின்
அரசியலைக் கற்றினிதே ஆட்சிபூணே.

## 6. புறப்பொருள் விளக்கம்

புறப்பொருளாய்ப் போரதனைப் பாடிவைத்தார்
புதுமைகளின் புறப்பொருளை மறந்தேவிட்டார்
திறமான மண்விளைவும் நீரின்போக்கும்
தெளிவுபெறப் பயன்தருகும் பொருளையாய்ந்து
குறையகலும் வீரநடை நூல்களாக்கிக்
குணமோடு கடமையெனக் கற்றிருந்தால்
பிறநாட்டின் திறமைதனை வெல்லும்கண்டீர்
பெருமைதவழ் தமிழகத்தின் பொறிகளின்றே.

## 7. இதுவுமது

புறப்பொர்ருளின் திறனாய்வில் போரொன்றல்ல
புதுப்புதுவாம் செயல்வளத்தைப் பொதுவதாகத்
திறத்துடனே நடத்துகின்ற தீரங்கண்டு
திடமுறவே கற்பனையும் சேர்த்துமேலாம்
புறத்துள்ளத் தொழில்வளமும் பொருள்வளர்ச்சிப்
பூப்பினொடு விளைபொருளின் புதுமைதானும்
சிறத்தையுடன் கண்டுணர்ந்துச் செயலைத்தாங்கும்
சீலமுள்ளப் புறப்பொருள்நூல் தன்மைகாணே.

## 8. மருத்துவ நூலின்திறமை.

மருத்துவத்தின் முறைமைகளை விளக்கியுள்ள
மாண்பான நூல்களெலாம் பொருள்நூலாகும்
கருத்துடனே நாட்டிலுள பொருளுக்கெல்லாம்
கனிவோடு குணங்கூறி பயனுங்கூறி
திருத்தமுள மருத்துவத்தின் திறமைகூறி
திடமுடைய வெடிமருந்து நச்சுத்தன்மை
புறப்பொருளைத் தேர்ந்தாய்ந்துப் பாக்களாகப்
புனைந்திருத்தல் காணீரோ புலமிக்கோரே.

## 9 இதுவுமது

அகத்தியரும் புலத்தியரும் புலியின்பாணி
அருள்மிக்க புசுண்டரொடு கபிலர்சித்தர்
மிகத்திறமாம் புறப்பொருள்நூல் தந்தாராய்ந்து
மிடுக்குடைய பொருட்டிறத்தின் மேன்மைதேர்ந்து
சகத்தினுக்குத் தேவையுள நுணுக்கந்தன்னை
சரிபார்த்துத் தமிழறிவுங் கூட்டிச்சேர்த்து
அகப்பொருள்நூல் புறப்பொருள்நூல் அருளிச்செய்தார்
அனைவோரும் படித்தறிந்தே அறிஞராவீர்.

## 10 பேச்சுத் திறன்

சொல்லினிலே உயிராற்றல் நிறையஉண்டு
சொல்லமைவே செயலாற்ற வல்லதாகும்
சொல்லுயிரைக் காத்துநிற்கும் மகிழச்செய்யும்
சொல்லாற்ற லறிஞர்களின் சொத்ததாகும்
சொல்லுள்ளத் தூய்மைதனில் பிறக்குமாயின்
சொல்லினுளே வுயிராற்றல் சுரந்துநிற்கும்
சொல்வல்லோ ரெனமக்கள் புகழ்ந்துவாழ்வார்
சொல்லாற்றல் நூல்களது நிலைத்தல்காணே.

## 11 மும்மைநிலை

நாவினிலே பேசுகின்றோம் கருத்தையூட்டி
நாச்சொலினுள் தூய்மையுறில் வாய்மையாகும்
பூவுலகில் கைகால்கண் தலையினோடு
புறவுறுப்புத் தூய்மைபெறின் மெய்ம்மையாகும்
ஆவியிலே வுறையுள்ளம் மனதுபுத்தி
அகத்தறிவே தூயதுறி லதுவேவுண்மை
ஏவுவதால் முத்தூய்மை அமைந்திடாது
இனிதுறவே திண்மைதனை ஏற்றுக்கொள்ளே.

## 12 கலைகளின் சிறப்பு

துள்ளியெழும் காலநிலை பருவம்யாவும்
துணிவுடனே கூட்டுவிக்கும் இயற்கைக்காட்சி
உள்ளமதைத் தூண்டிவிடும் ஊக்கம்தன்னை
உறுபுலவோர் கலைகளெனப் பாடிநின்றார்
தெள்ளினிய கலைகளறு பத்தினான்காய்த்
தீந்தமிழின் அரசுமுறை தேர்ந்தாரன்று
கொள்ளெனவே வழங்குகின்ற கொள்கைதன்னைக்
குவலயத்தோர் கலைகளெனக் குறித்திட்டாரே.

## 13 நிலைநூல்

புத்தகங்க ளெத்தனையோ தோன்றினாலும்
புதியதனைக் கிழித்தெறியும் புதுமையுண்டு
மெத்தபழங் காலத்துக் கிழிந்தஏட்டை
மெதுவாகப் பசையொட்டிக் காத்தலுண்டு
புத்தகத்துள் முக்காலம் பொருந்திநின்றால்
பூமியுள மட்டுமது பொலியவாழும்
அத்தருணக் கருத்துரைக்கு மேடதாயின்
அதனைமறு சமயத்தே யார்பார்ப்பாரே.

## 14 இயற்கைக் காட்சி

பொங்குதமிழ்க் கடலொலியும் பூக்கள்தேங்கும்
பூங்காவின் பறவைகளின் பேச்சும்பாட்டும்
பொங்குகின்ற சீரொலியும் மனைகள்தோறும்
பூங்கரத்தால் மீட்டிடும்யா ழொலியும்வீதி
தங்கிவிளை யாடிவரும் சேய்கள்தம்மின்
தமிழொலியும் கேட்டுக்கேட் டின்பம்துய்க்கும்
செங்கதிரோன் மனமகிழ்ந்து வாழ்த்தும்நாளே
செந்தமிழின் தைப்பொங்கல் திருநாள்தானே.

## 15 வாழ்வின் கடமை

ஒருநிலையாய் நிற்பதற்குப் புத்திவேண்டும்
ஒன்றுபடும் வாய்ப்பினுக்குப் பொதுமைவேண்டும்
திருநிலையில் பொருளதனைத் தேடவேண்டும்
தேக்கிவைக்கும் பொருளளவைத் தெளியவேண்டும்
பெருநிலையாம் நூல்கள்தமைப் பெருக்கவேண்டும்
பேதமிலா நல்லறத்தைப் பேணவேண்டும்
கருதரியப் புதுமைசெயல் கமழவேண்டும்
கடமைசெயும் குடிமைதனின் பொதுமையீதே.

## 16. பகையிலும் சிறப்பு

பகைதனிலே தெளிவுபெறல் பழமைஞானம்
பகுத்துணர்ந்தோர் வாழ்வுதனில் பகையிராது
பகையினிலே மாட்சிமையும் பழுப்பதுண்டு
பண்புணரார் மதியதனைப் பாழ்செய்கின்றார்
மிகைதனிலே பொதுமையுளோர் மேன்மைகாண்பர்
மிடியதனில் மிகையழிதல் தீயோர்நண்பாம்
வகையுணரா மனதுடையோர் வாழ்வுவீழும்
வழியறிந்தோர் பகைமைதனை வகுத்திடாரே.

## 17. மனையறமாட்சி

நாட்டினிலே பெரியோர்கள் நண்புபேசி
நன்மைதனை வகைவகையாய் நாட்டுவார்கள்
வீட்டினையே வாழ்விடமாய் விளக்குவார்கள்
வீண்வழியில் பொருளிழக்க விடவேமாட்டார்
பாட்டினிலே கருத்தமைத்துப் பாக்களாக்கிப்
பல்லாண்டு வாழ்வதற்குப் பாதைகாண்பார்
ஏட்டிலுள நாட்டுணர்ச்சி எழிலைக்கற்றே
இணைகாண தமிழரசைக் காத்துவாழ்வார்

## 18. மனையற மாண்பு

மனைகாத்தல் பெண்மைதமின் மதியதாகும்
மனைமாட்சி தாங்கிடுவோர் மனையோராவர்
வினைகாத்துப் பொருளமைப்போன் கணவனுவான்
வேந்தனுமாய் நாடாளும் பணிமேற்கொள்வான்
மனையவளின் கூட்டுறவால் பொதுமைகண்டோர்
மனையறத்தைக் காத்தினிதே மகிழ்வுகொள்வார்
மனையவளோ வரைவினளாய் மாசுகாணில்
மனைவளமும் மற்றவர்க்கே உரியதாமே

## 19. தொழில் வளத்தில் சீர்கேடு

குடிசெயற்கு வேளாண்மைத் தொழிலேபோதும்
குலவுசுற்றம் பேணுதற்குப் பொருளைநல்கும்
மடிகுணமும் சோம்பலொடு பிறவும்சூழ்ந்தால்
வறுமைதரும் வீண்செயலே வந்துசேரும்
மிடிகள்பல துன்புறுத்தும் மீதம்காணு
மேவாரின் தொடர்பதனுல் கீழ்மைநாடும்
துடிதுடிப்புச் செயல்நிகழும் தூக்கம்வாரா
துயரமொடு சங்கடங்கள் தோன்றும்தானே.

## 20. வாழ்வில் பண்பு

பயமகன்று வாழவென்றுல் பண்பைக்காத்துப்
பழமைதனின் வளங்காத்துப் பணிதல்நன்றும்
கயமைகளாய் கசடுறவே கடிந்துநொந்து
கள்ளமொடு வஞ்சனையைக் கையிலேந்தி
தயவின்றி வாழ்வதிலே பயனென்றில்லை
தன்மானம் சிறிதில்லை தரமுமில்லை
நயமதொடு தமிழறிவால் நண்புகண்டால்
நாயகமாய் வாழ்ந்திடலாம் நாடுவீரே

## 21 நிறை வாழ்வு

ஞானமுறை நிறைபடினும் வாழ்க்கைவேண்டும்
நாட்டின்வளம் பெருகுதற்குத் தவமும்வேண்டும்
மானமந்தப் பொருளெனவே காத்தல்வேண்டும்
மதியெனுமோர் திறமையது மலியவேண்டும்
கோனெனவே வாழ்ந்திடினும் கொடையும்வேண்டும்
குறைகூறு நிறைமனதாய்க் குலவவேண்டும்
நானெனற்கு சான்றுண்மை நடத்தைவேண்டும்
நலமெல்லாம் பொருந்துவதே வாழ்வுகண்டாய்.

## 22. நட்பின் விளைவு

இளமையிலே பற்றுகின்ற எண்ணமேதான்
இனத்துடனே பழக்கமென வளர்ந்துநின்று
வளமையிலும் புதுமையிலும் தொடர்ந்துவந்து
வகைவகையாய் நடைமுறையில் பயனைநல்கும்
களவுமுறை பழமையெனும் கருத்துமிக்கோர்
கடுகளவும் கற்புநிலை காத்தலில்லார்
பிளவினிலும் குறையைவிடார் பேச்சில்மிக்கார்
பிடிவாதம் கொண்டிழிவைப் பெருக்குவாரே.

## 23. நட்பின் தெளிவு

நன்றியுள நண்பதனைக் காத்தல்வேண்டும்
நண்புளத்தைப் பெருக்கிசெயல் நடத்தல்வேண்டும்
வென்றிமிகும் பேருதவி செய்தல்வேண்டும்
வீரமொடு வாழ்வமைக்கும் திறமைவேண்டும்
சென்றதையும் தின்றதையும் மறத்தல்வேண்டும்
சீயென்னும் கீழ்மைசெயல் நீக்கவேண்டும்
நின்றநிலை தவருமல் நிலைக்கச்செய்து
நிறைமனதைப் பெருக்குவதே நண்புகாணே.

## 24. பொது அறிவு

நாமென்ற பொதுநிலையில் நாட்டம்வேண்டும்
நமையுணரும் தனியறிவில் வீரம்வேண்டும்
ஓமென்றும் நமவென்றும் கூறும்சொல்லின்
ஒலியதனை அகரமதில் உணர்தல்வேண்டும்
நேமங்கொள் ளுலகினிலே தமிழினோசை
நிலைபெறுதல் உயிரினது நீண்டவாழ்வு
காமங்கொள் தீநெறியில் கலந்துநின்று
கருத்திழந்துத் தேயாமல் காதல்பூணே.



## 25. இதுவுமது

வாழ்வென்றால் பொருள்திரட்டல் வாழ்வதல்ல
வளமனையின் பொலிவதுவே வாழ்தலாகும்
தாழ்வென்றால் பொருளிலராய்த் தவித்தலல்ல
தனதுமனை பகைபிறவே தாழ்வதாகும்
மாழ்வெனிலோ திடவுடலம் மறைதலல்ல
மனைவளமே யமையாது மங்கிமாழ்தல்
வீழ்வென்றால் பொருளிழந்து வீழ்தலல்ல
வினையுமுயிர் உடலறிவும் வீழ்தலாமே.

## 26. மரபு காத்தல்



தொழிலதனைக் கடமையெனச் செய்தல்வேண்டும்
தொழிலளவு பொருள்பெறுதல் பயனதாகும்
வழிவழியாய் மனிதர்குலம் பிறந்திறந்து
வழியறிந்துச் செல்லுவதே மரபதாகும்
பொழிலெனவே புதுமைவளம் புனைந்துமேலாம்
பொதுமுறையில் குடிமைபெறல் சீரதாகும்
மழையெனவே பொழியமுத மழலைபேசி
மனையறத்தைக் காத்துவரல் மரபேகண்டீர்.

## 27. வாழ்வில் முன்னேற்றம்

நல்லவராய் வாழவென்ருல் வழிகள்கேளு
நாநயத்தை மேற்கொண்டு நம்பிவாழ்ந்தால்
வெல்வழியில் மேன்மையது விரும்பிச்சூழ்ந்து
வேந்தெனவே நலமமையும் வீணிராது
செல்வரினும் செல்வரெனச் சிறந்துநின்று
சீருடனே புகழமையச் சேரும்நண்பு
புல்லறிவின் தாழ்வினரைத் தொடர்ந்திடாமல்
புதுமைதனை விரும்பிமனை புதுமைகாண்பீர்.

## 28. ஆட்சியின் மாட்சி

வீடதனைப் பொருள்விரும்பி விற்கமுந்தல்
வீடுடையோர் பிறர்வீட்டை வாங்கமுந்தல்
நாடதனுள் புறமொழியைத் தாயென்றூட்டல்
நாட்டெழிலுக் கெதிரான பண்பைக்கூறல்
நீடிலதாம் பலகடவுள் கோவில்கட்டல்
நேர்மைக்கு மாருன நூலுண்டாக்கல்
பாடமையாச் சோம்பல்தனை வளர்த்தலாதி
பண்பமையாச் செயல்தடுப்ப தாட்சியாமே

## 29. சீர்திருத்தம்

வறுமைசெயும் சூதாட்சி வழக்கமீண்டு
வந்துபுகுந் தடிமையொடு கடனுமாக்கி
திறமைகுறைந் தறிவகற்றி தீங்குசெய்து
திடமறியா மனிதரெனப் பேரும்பெற்ற
புறவக்ந்தை யின்றிழிந்து போனதாலே
புதுமையது பொலிமனையில் தமிழினுண்மை
அறமிகுந்து வாழ்விணைந்து அனைத்துமாகும்
அறிவினெடு மனையறத்தை ஆண்டிடீரே.

## 30. அறவழி

தொழிலமையா குடிமைதனில் வாழ்விராது
　　தொடருமொரு பணியிலதேல் நிலையிராது
வழியமையா மனையவளால் பொலிவெழாது
　　வகைபுரியா மதியதனால் செழுமைவாழா
பொழிலமையா நிலமதனில் மழைவிழாது
　　பொதுவறியா மனிதரிடம் பண்பிராது
பழிபுரியாப் பெரியரிடம் பகையிராது
　　பணிவுடைய மனையமையில் பலவுமாமே.

## 31. அறமுறை

கரவதனை நினைவினிலே கருதுவோரைக்
　　கடுகளவும் மனிதநிலை காத்திடாது
உரமமையாத் திறமைதனால் வளமேகாணா
　　உடமைதனால் நலமெதுவு மொளிதராது
வரவுமிகும் வரனெனவே வாழ்ந்துநின்றால்
　　வளமதெலாம் நிறைவுபெறும் வளரும்சீலம்
பொருளுடையோர் அறவழியைப் போற்றிநின்றால்
　　புறத்தினிலும் அகத்தினிலும் செழுமையாமே.

## 32. வாழ்வின் நுணுக்கம்

நிலையான வாழ்வுதனை அமைத்துக்கொள்ள
　　நினைக்கின்றீர் நினைத்ததனை நினைத்துப்பாரீர்
அலையாகப் புவியினுளே அலைகின்றீர்கள்
　　அகமகிழும் வழியதனை அறியமாட்டீர்
விலைமதியா முதற்சங்கப் புலவர்வாக்கை
　　வேற்றினதாய் மதிக்கின்றீர் விளங்கிடாமல்
கலைபொலியும் திருக்குறளைக் கற்றுத்தேர்ந்தால்
　　கவலையிலாப் பெருவாழ்வைக் காணலாமே.

## 33. இலக்கியப் பண்பு

பொதுத்தொண்டுக் கிலக்கணங்கள் தமிழிலுண்டு
பொறுத்திருந்தே வெற்றிகொளும் போக்குமுண்டு
மிதக்கின்ற பொருளுடையோர் ஆதிக்கத்தை
மேலான கவிஞர்களே காணவல்லார்
மதிப்புற்ற தமிழறிவின் தொண்டில்நின்ருல்
மரியாதை குறையாது மாண்புவெல்லும்
புதுப்பற்று கொண்டதல நூலின்வாழ்வு
புக்கிடுவீர் பொதுமைவழி புலமிக்கோரே.

## 34. கழகப் பண்பு

தி. மு. க. இயக்கமது தமிழன்பண்பு
திருநாட்டின் முன்னேற்றக் கழகமீதே
நமதறிவால் நமதெழிலே நாமேகாக்கும்
நமதரசின் ஆட்சிதனை நடத்தும்மன்றம்
சமநிலையில் மக்கள்தமைக் காத்திடற்கு
சாதிக்கும் அறமுறையின் சீர்மைசங்கம்
நமதரசைக் காத்துவரும் படையின்மாட்சி
நமதேயாம் கழகபணி மேற்கொள்வீரே.

## 35. பிழைகூட்டும் நூற்கள்

வழிவகுத்து முறைபுகலும் குடிமைநூற்கள்
வாதினையும் சூதினையும் நீங்கிநிற்கும்
பழிதொகுத்துக் குறைமுடித்துக் காமம்சேர்த்து
பகைநுழைத்துப் போர்தொடுக்கும் மடிமைகோத்து
இழிவிணைத்து நிலைகலைத்துக் களவைக்கூட்டி
இகல்வளர வழிவகுக்கும் இடரைச்சேர்த்து
பிழைவகையைக் கதைவழியே பிணைப்பதெல்லாம்
பிறநூற்கள் இடைகாலம் பிறந்ததாமே.

## 36. நூல்களின் உண்மை

நூலறியாக் காலத்தே நுண்மைகண்டார்
நூல்பிறந்த நற்காலம் மடமைகொண்டார்
நூலெளிதாய்ப் பொருள்குணத்தின் நுண்மைதன்னை
நுவலுவதே வாழ்க்கைமுறை நூற்களாகும்
நூலெழுதும் மரபுநிலை கல்லாமாந்தர்
நுண்மையிலா காமம்போர் கடவுள்தன்னை
நூலெனவே கோத்திட்டார் காமம்தன்னால்
நோய்களது வாழ்வினிலே நுழைந்ததாமே.

## 37. தமிழன் பண்பு

நோயறியாக் கொள்கையதே தமிழன்பண்பு
நோயென்றான் பசித்ததனை உணவுகண்டான்
நோயுறையும் பலவகைக்கு மருந்தாய்க்கண்ட
நுண்மையதே மனையறத்தின் மருத்துவம்தான்
நோயென்றான் காமமதை மனையாள்கண்டான்
நோயற்ற தூய்மைநிலை சித்தர்கண்டார்
நோயுறையும் தீயசொற்கள் தோன்றிடாமல்
நான்முறைகள் காப்பதுவே தமிழின்பண்பாம்.

## 38. தமிழின் சிறப்பு

உலகமெலாம் நிறைந்தஒலி அகரமாகும்
உரிமையிதை கண்டறிந்தோன் தமிழனானன்
பலமொழியும் உயிரெழுத்தைப் போற்றிமெய்யாம்
பண்புடைய உயிர்மெய்யாய் சேர்ந்துவாழும்
நிலமதிலே அகரஒலி பன்னீராக
நீளுமது நிறைவுகுறை நிலையினோடு
இலகிடவே மெய்யுயிரைச் சேர்த்துநின்று
யீண்டுமொழி பிறந்ததனால் தமிழாயிற்றே.

## 39. தமிழின் உயர்வு

உலகினுக்கே தமிழ்மொழிதான் உயிரதாகும்
உண்மைகண்டோர் தழிழகத்தைப் போற்றிநிற்பார்
நிலமதிலே சீருடையத் தமிழகத்தை
நேசித்தோர் நலமோங்கி நீடுவாழ்வார்
கலகமொடு தமிழகத்துள் கால்வைத்தோர்கள்
கண்ணியமோ டேகினதாய்க் கதையேயில்லை
பலநினைவேன் உலகத்துப் பலநாட்டாரும்
பண்பாகத் தமிழ்மொழியைப் பழகுவாரே.

## 40. தமிழற நூற்கள்

நாட்டிலுள பழமைகளை நவிலும்நூற்கள்
நமைபுதுமை முற்போக்குக் கிழுத்துச்செல்லும்
வீட்டுவளம் செழிப்பதனைக் கூட்டும்நூற்கள்
வினைவழியே பொருள்திரட்டி முற்போக்காக்கும்
கூட்டுமுறைத் தத்துவத்தைக் காட்டும்நூற்கள்
கூடியுணும் பொதுவளத்தைக் கூட்டுவிக்கும்
பாட்டுவழிப் பாடிவைத்த முன்ஞோர்நூற்கள்
பலவுண்டு தமிழறத்தைப் படித்திடீரே.

## 41. இதுவுமது

வாட்டமிலா துளங்களிக்கும் வழியேநூற்கள்
வகைவகையாய் குணங்கூறும் வாய்மைசேர்த்தே
ஈட்டுகின்ற முறைவகுக்கும் புலமைநூற்கள்
ஈண்டுண்டு வாழ்வியலின் புதுமையோடு
தீட்டுகின்ற சுறுசுறுப்பைக் கூட்டும்பாக்கள்
திக்கெட்டும் பரவியுள தமிழின்நூலே
ஏட்டுவழி நிலைநின்ற பாட்டுநூற்கள்
இல்லறத்தின் துணைவகுக்கும் தமிழன்நூலே.

## 42. பிளவு முறை நூற்கள்

இலக்கியமாய்ப் பிளவினங்கள் நுழைந்ததாலே
இந்நாட்டின் தமிழறங்கள் மறைந்துநின்று
கலைக்கருத்தின் தொன்மைநலம் தெளிந்திடாமல்
கவலைகளும் பிளவுகளும் தோன்றக்கண்டோம்
நலத்துறையின் நுண்ணுணர்வை விளக்கம்செய்தால்
நாட்டிலுள மக்களெலா மொன்றேயாவர்
இலக்கறிந்து மக்கள்தமை நடத்துகின்ற
எழில்முறையில் பிளவகன்று வாழுவீரே.

## 43. மனித ஆற்றல்

மனமெனுமோ ரணுக்குழுவின் மாண்புதானே
மனிதனுடை பேராற்றல் வளர்ச்சியாகும்
மனமதனைப் பழக்கியவர் சித்தும்செய்தார்
மனமதனின் நுண்மைதனுல் பலவுங்கண்டார்
மனிதனவன் தெய்வமெனப் போற்றப்பெற்ருன்
மாமுனிவர் பரமன்மால் மனிதன்தானே
மனிதரிலே செயற்கரிய செய்தபேரை
மனிதர்களே போற்றுவது மரபுதானே.

## 44. இதுவுமது

மனிதனவன் மன்னனென ஆட்சிபூண்டான்
மனிதன்தான் அமைச்சனென மதியைச்சொன்னுன்
மனிதர்களே வீரரெனப் படைமேற்கொண்டார்
மனததனுல் பலசிறப்பைத் தாங்கிநின்ருர்
மனதினிலே பெண்ணுனென் றிரண்டேயில்லை
மதியுடையப் புலமையிலும் பெண்ணுணில்லை
தனிமனிதப் பேராற்றல் தன்னைக்கண்டோர்
தாரணியில் வழிகாட்டும் புகழ்பெற்ருரே.

## 45. செயற்கரும் செயல்

மனிதனையே அறிஞரென்பார் தலைவரென்பார்
மனிதனையே தொழுதேத்தி வணங்கிநிற்பார்
மனிதனிலே தந்திரிகள் பலபேருண்டு
மனிதர்களே நாயன்மார் ஆழ்வாரானர்
மனிதனெனப் பிறந்தோனே முருகன்கண்ணன்
மனிதர்களே அவதார மாண்பைப்பெற்ருர்
மனிதன்தான் ஏசுமகம் மதுவாம்புத்தன்
மனிதரிலே சிறந்தபல பெரியார்கண்டோம்.

## 46. தன்மதிப்பு

தமிழகத்தின் மனதாற்றல் இறைமைபூணும்
தனித்தமிழன் பேராற்றல் தலைமைகாணும்
இமையளவும் வீண்பொழுதைக் கண்டிலாதார்
இன்றளவும் தன்மதிப்பை யிழந்திடாதார்
அமைதிநிலை தெளிமனதோ ரன்பைப்பூண்பார்
யாரிடத்தும் நண்புநிலை காணுவார்கள்
சமநிலையில் மனையறத்தைச் சார்ந்தவல்லோர்
தாரணியில் வாழ்வாங்கு வாழும்நல்லோர்.

## 47. மனதின் வளர்ச்சி

மனமதுவே மதியாகு மறிவுமாகும்
மனதொடுமுன் சென்ருரே மனிதரானர்
மனமதில்லா மக்களிந்த மண்ணிலில்லை
மாக்களுக்கும் மனமுண்டு வாய்மையில்லை
மனமிருந்தும் வாய்மையில்லா மனிதருண்டு
மனதாற்றல் வளராத மக்களுண்டு
மனதினிலே பற்றுவதே வளர்ந்துமுற்றும்
மனமதனல் பற்பலவாம் மனிதரானர்.

## 48. சிறப்பமைப்பு

கடவுள் தமக் கமைக்கின்ற கோவில்போல
கண்ணியமாய் மனைகள் தமை அமைத்தல்வேண்டும்
கடவுள் தனக் கிணங்கிமிகப் பணிதல்போலக்
கனிவுமனை மகவுசுற்றம் பணிதல்வேண்டும்
கடவுள் தனக் கணியுணவு சிறப்பைப்போல
கலைபுலவர் அறிஞர் தமைக் காத்தல்வேண்டும்
கடவுள் நிலை மனதுபெறின் குறைவேயின்றும்
கருணையொடு மனிதர்களை வணங்கிவாழ்வீர்.

## 49. அறியாமை வாழ்வு

அலைகடல்சூழ் தமிழகத்தை அழகுசெய்யும்
அறிவதனைத் தீரமொடு பயின்றிடாமல்
நிலைகலைந்துப் பிறர்க்காளாய் நேர்மைமாறி
நிறைவில்லா மனிதரென நிமிர்ந்துநிற்பீர்
கலைதவழும் தமிழறிவின் கருத்துத்தன்னைக்
கற்றறியீர் கண்ணியத்தைக் கருதிப்பேணீர்
புலமையிலா பிறமொழிக்கே அடிமையாகிப்
புகழின்றி வாழுவது புதுமையாமோ.

## 50. நூல்களின் வகை

அந்தந்தக் காலத்தின் மாறுபாட்டை
அறிவித்தற் கெழுகின்ற நூல்களுண்டு
எந்தெந்தக் காலத்தும் நிலையாய்நிற்கும்
எழிலுடைய நூல்களுமே எழுவதுண்டு
வந்தபல மதமதனை வழுத்துதற்கு
வழிநூலாம் பலநூற்கள் தமிழிலுண்டு
சிந்தித்துத் தமிழ்மரபு நூலையாய்ந்தால்
சீர்முறையின் மனையறத்தைக் காணலாமே.

## 51 தமிழறம் பொது

தென்மொழியாம் செந்தமிழைத் தேயத்தோர்கள்
தேடிபயில் கின்றதொரு தெளிவைக்கண்டு
பின்னடைந்தத் தமிழகத்தோர் பீரிட்டின்று
பெரும்படையாய்ச் சேர்ந்திருத்தல் பெருமையன்றே
நன்னிலமாம் திருநிலத்தோர் நாட்டின்வாழ்க்கை
நாமறிந்தத் தமிழ்மரபின் தொன்மையன்றே
என்னெறியும் தமிழ்நெறியி னிணைப்பேயென்று
எந்நிலமும் போற்றுவதைக் கண்டுதேறே.

## 52. முயற்சி வழிகூட்டும்

கொள்கைதனை நடத்துகின்றோர் கோடிகோடி
கொள்கைதனின் கோரிக்கை முன்னேற்றம்தான்
கொள்கவென மக்களுக்கே கொடுக்கத்தக்க
கொள்கைக்குத் திட்டமது நிறையஉண்டு
வள்ளலென வழங்குமொரு நிலையில்நல்ல
வழிகளொடு பொருள்புகழும் குலவிநிற்கும்
கொள்கையினோர் தனதுரிமை கோரிநின்றால்
குணமுடனே கொள்கைவழி கூட்டுங்காணே.

## 53. தயங்காத செயல்

தன்குற்றம் நீக்குவதில் தயக்கம்வேண்டாம்
தன்னுளத்தைத் தூய்மைசெயத் தயக்கம்வேண்டாம்
தன்பணியைச் செம்மைசெயத் தயக்கம்வேண்டாம்
தன்மனையைச் சிறப்புசெயத் தயக்கம்வேண்டாம்
தன்னறிவைப் பெருக்குதற்குத் தயக்கம்வேண்டாம்
தன்சுற்றம் தாங்குவதில் தயக்கம்வேண்டாம்
தன்னிலையை முன்னேற்றத் தயங்கவேண்டாம்
தனிக்கடவுள் பணிதனக்குத் தயங்குவாயே.

## 54. பற்றும் பயனும்

இனப்பற்று குணப்பற்று மொழிப்பற்ருேடு
எழில்பற்றே யிதயத்தைத் தூய்மையாக்கும்
சினப்பற்ருே தீங்குகளைத் தேக்கிப்பற்றி
திகைப்புற்றே தாழ்த்திடுமோர் நிலையுண்டாக்கும்
மனைத்தக்க மாண்போடு மக்கள் தம்மின்
மதிநலத்தைப் பற்றிடுவோன் தொண்டனுவான்
வினைப்பற்று தனைப்பற்றி மனப்பற்ருேடு
விளைவினையே பற்றுதலே மனையின்பற்றே.

## 55. இதுவுமது

பற்றென்ற சொல்லதனைப் பற்றிநீ யாய்ந்துபார்
பற்றினுக் கீடு பற்றி
வெற்றுரைக ளொவ்வாது முற்றுமொரு கலைஞானம்
வீரிட்ட பேருணர்ச்சி
சுற்றுநிலை யொத்தவுள முற்றதிட வெற்றியுள
சுடராகு மன்பின் பற்று
நிற்றநிலை பற்றியதி லுற்றகலை பற்றிமனை
நீதிகளைப் பற்றிவாழே.

## 56. அறியாமையின் வீண் பற்று

பற்ருக தெய்வத்தைப் பற்றியே வாழ்க்கையை
பறிகொடுத் தோர்கள் பலபேர்
கற்றவர்கள் கடவுளைப் பற்றிபொருள் கேட்டழுது
கலங்கி கெட்டோர்கள் பலபேர்
பற்ருக வேதாந்த சித்தாந்த யோகமென
பற்றிநொந் தோர்கள் பலபேர்
பற்றென்று வீண்செயலைப் பற்ருகப் பற்ருதே
பற்றுவாய் வாழ்க்கை பற்றே.

## 57. தமிழறம் பொது

உலகபொது நூல்கள்தமை உணர்தல்வேண்டும்
உண்மையுள தமிழறத்தை மறத்தல் தீது
இலகுபல நாட்டறிவின் நூலைக் கொண்டு
எழிலானத் தமிழ்ப்பண்பை யெண்ணிப் பார்க்கில்
நிலவுகிற கலையரவும் தமிழகத்தின்
நிழலிலே தங்குவதை நேரில் காண்பர்
பலபலவாய்க் கருத்ததனைப் பாழாக்காமல்
பாங்குடனே மனைவாழ்வி லிணைந்துவாழ்வீர்.

## 58. நாட்டினறம் பொது

புத்தியுள்ள பிள்ளையானல் பிழைக்கலாகும்
புதுப்புதுவாம் கட்சிதனில் புகுதல்தீது
எத்தினமும் தொழில்மறந்து சேவையென்று
ஏதெதையோ செய்வதெலாம் வீணர்வேலை
மெத்தவுமே நம்நாட்டின் கழகக்கொள்கை
மேன்மைதனை நடத்தைதனில் காணவேண்டும்
எத்தனையோ நூல்வரினும் எம்மின்சொந்த
எழில்நாட்டின் திருக்குறளை இறைஞ்சுவீரே.

## 59. தன்மதிப்பு

தன்குணத்தைத் தானறியா மாந்தராகத்
தாரணியில் வாழுவது வாழ்க்கையல்ல
தன்னியல்பே தனியாகும் பிறருக்கொவ்வா
தன்செயலைப் பிறருளத்தே அறிதல்நன்ரும்
தன்மனையும் தன்பணியும் தழைத்துநின்ருல்
தன்னலே பிறர்வருந்தத் தேவையில்லை
தன்குணமே பொதுமைதனிற் றங்கிநிற்கும்
தகுதியொடு பணியாற்றித் தழைத்திடீரே.

## 60. கேள்வியின் சிறப்பு

நுணுகியபல் கேள்விகளைக் கேட்டுக்கேட்டு
நூலறிவால் செயலறிவின் நுட்பம்தன்னை
அணுவணுவா யாய்ந்தாய்ந்து சிந்தித்தேதான்
அறிவுதனைப் பெற்றிடிலோ அகத்திலுள்ள
முணுமுணுப்போ டெடுப்புச்சொல் லிரைச்சலோடு
மூட்டிடுசச் சரவுநிலை நீங்கும்கண்டாய்
குணமுடனே சிறப்பினொடு புகழவாழ்வீர்
குவலயத்தில் மனிதநிலை சிறக்குங்காணே.

## வாழ்த்து.

அறமுறைதே ரறிஞரண்ணு அன்புவாழ்க!
அவர்தலைமைத் தமிழாட்சி நீடுவாழ்க!
திறமையுள துணைவரெலாம் செழித்துவாழ்க!
உறவுகொளும் கழகவளம் ஊற்றெடுத்தே
உதவிசெயும் நண்புவளம் சிறந்துவாழ்க!
உதவிசெயும் நண்புவளம் சிறந்துவாழ்க!
அறவழியின் பயன்வாழ்க ஆற்றல்வாழ்க!
அணிதமிழின் தலைமையண்ணு வாழ்க! வாழ்க!!



